|| ஓம் ஸ்ரீபரமாத்மநே நம: ||

1110

# ஆயிரம் அமுதத் துளிகள்

आयिरम् अमुद तुलिगल् (तमिल)

பெருமதிப்பிற்குரிய ஸ்வாமி ராம்ஸுகதாஸ்ஜீ அவர்களின் சொற்பொழிவுகளிலிருந்து தொகுக்கப்பட்ட விலைமதிப்பற்ற அமுத மொழிகள் ஆயிரம்.

अमृत-बिन्दु ( तमिल )




ஸ்வாமி ஸ்ரீராம்ஸுகதாஸ்ஜீ

1110 Amrit Bindu (Tamil)_Section_1_Front

॥ஸ்ரீஹரி:॥

## முன்னுரை

அன்றாடம் உலகியலில் உழன்று பல விதங்களிலும் துன்புறும் மக்களின் மன உளைச்சலுக்கு அருமருந்தாகவும், நிரந்தரமான பேரின்பத்தை விழையும் ஆன்ம ஸாதகர்களுக்கு உறுதுணையாகவும் ''அமுதத் துளிகள்'' என்ற இப்புத்தகம் வெளியிடப்படுகிறது. பெருமதிப்புக்குரிய ஸ்வாமி ராம்ஸுகதாஸ் அவர்கள் நிகழ்த்திய பேருரைகளிலிருந்து ஆய்ந்தெடுத்த இவ்வருள் மொழிகள் ஆயிரமும் பொருத்தமான தலைப்புகளில் எளிய மொழியில் தொகுத்தமைக்கப்பட்டுள்ளன.

மொழிகள் சுருக்கமாக இருந்தாலும் உட்பொருள் ஆழமானது. ஸாதகர்கள் எளிதாகக் கற்று இதயத்துள் இருத்திக் கொள்ளலாம். ஆழ்ந்து சிந்திப்பதால் மனக் கவலைகளும், அமைதியின்மையும் நீங்கும். இதைக் கற்பவர்கள் மேன்மைப் பாதைக்குத் திரும்பித் தமது வாழ்வைப் பொருள்படைத்ததாகச் செய்து கொண்டு பிறவிப்பயனைப் பெறுவர் என்று உறுதியாக நம்புகிறோம்.

வெளியீட்டாளர்.

# பொருளடக்கம்



# அமுதத் துளிகள்

## அழியாத இன்பம்

தனக்காக இன்பம் விரும்புவதால் அழியும் சுகமே கிடைக்கும்; பிறருக்காக இன்பத்தைத் தேடுவதால் அழியா இன்பம் பெறலாம். 1

இன்பம் துய்ப்பதற்காக ஸ்வர்கமும், துன்பம் துய்க்க நரகமும் உள்ளன. இன்ப துன்பங்களுக்கு மேற்பட்ட மேலான ஆனந்தத்தை அடைய இவ்வுலகம் உள்ளது. 2

உலகியலின் தொடர்பை அறுப்பதன் மூலம் கிடைக்கும் இன்பம், உலகியலுடன் தொடர்பு கொள்வதனால் ஒருபோதும் கிடைக்காது. 3

அழியும் இன்பத்தில் ஈடுபடும் வரை, அழியா இன்பம் பெற இயலாது. 4

போகங்கள் தரும் அழியும் இன்பம் வறண்டுபோய் முடிவுறும். பரமாத்மா தரும் அழியா இன்பமோ முடிவுறாச் சுவையுடன் வளர்ந்து கொண்டே இருக்கும். 5

## செருக்கு

உயர்வில் கர்வம் கொள்வது, தாழ்வுக்குக் காரணமாய் அமைகிறது. 6

தன்னலத்தையும், செருக்கையும் துறந்தால் துறவுத்தன்மை கிட்டும். 7

அறநூல்களும், ஆன்றோர்களும் அளிக்கும் உயர்மொழிகளை அந்தக் கரணத்தில் ஒட்ட விடாமல் தடுப்பது, 'தான் அறிஞன்' என்ற செருக்கே. 8

வர்ணம், ஆசிரமம் இவற்றின் தனிச்சிறப்பு பிறருக்குத் தொண்டு புரிவதற்காகவே; தற்பெருமை கொள்வதற்காக அன்று. 9

தன்னில் காணப்படும் மேன்மையை பற்றிய செருக்கு எந்த அளவு உள்ளதோ அந்த அளவு தாழ்வைத் தந்துவிடும். எனவே நல்லவனாக இரு. ஆனால் அதனால் செருக்குக் கொள்ளாதே. 10

அறிவு தெளிவுதரும்; ஆனால் அறிவினால் ஏற்படும் செருக்கு நரகத்தைத் தரும். 11

உலகியல் பொருட்களின் சேர்க்கையோ செருக்கை அளிக்கும்; ஆனால் பகவான் கிடைத்துவிட்டால் செருக்கு வராது; ஆனால் செருக்கு அடியோடு அழிந்துவிடும். 12

தன்னலத்தையும், செருக்கையும் துறக்காமல் மனிதன் உயர்ந்தவனாக முடியாது 13

ஜாதியினால் செருக்கடைந்தால் அங்கு பக்தி தோன்றுவது மிகக் கடினம். பக்தி ஸ்வயம் ஆத்மாவிலிருந்து தோன்றுகிறது; உடலிலிருந்து அன்று; ஜாதியோ உடலைப் பற்றியது; ஸ்வயமான ஆத்மாவைப் பற்றியதன்று. 14

தன்னலமும், செருக்கும் உள்ளவரையில், யாரிடமும் ப்ரேமை தோன்றாது. 15

செருக்குள்ள மனிதன் சிறிதளவே தொண்டு செய்துவிட்டு மிக அதிகமாகத் தொண்டு செய்ததாக கர்வம் கொள்வான். ஆயின் செருக்கற்ற மனிதன் அரிய தொண்டுகள் செய்து சிறிதளவே செய்ததாக உணர்வான். 16

அறிவாளி என்ற செருக்கு முட்டாள்தனத்தின் விளைவு. 17

தனதேயான பொருளாலும் கர்வம் ஏற்படாது; தனதற்ற பொருளாலும் கர்வம் தோன்றாது. தனதல்லாத ஆனால் தனது என்று தவறாகக் கருதப்பட்ட பொருளால்தான் கர்வம் தோன்றுகிறது. 18

தான் அறிந்து கொண்டது முழுமை எனும் செருக்கினால் மனிதன் நாத்திகனாகிறான்; தான் அறிந்ததில் திருப்தி யடையாமல் தெரிந்து கொண்டது குறைவே என்ற பணிவுள்ளவன் "ஜிக்ஞாஸு" - முக்தியில் நாட்டம் கொண்டவனாகிறான். 19

தன்னலம், செருக்கு இவற்றைத் துறப்பதில் முக்கியத்துவத்தை வலியுறுத்தும் மதம், ஸம்ப்ரதாயம், கோட்பாடு, நூல், நபர் ஆகியவை மிகவும் உயர்வு பெறும்; தன்னலம், செருக்கு இவற்றில் முதன்மை பெற்றால் அவை மிகவும் தாழ்வுறும். 20

## "நான்" - எனும் எண்ணம்
### (அஹம்தா)

"நான்" என்ற எண்ணமே ஸம்ஸாரத்தின் (பிறப்பு - இறப்புச் சுழலின்) விதை. 21

உடலில் நான் - எனது என்ற எண்ணமே விதவிதமான, முடிவற்ற துயரங்களுக்குக் காரணம். 22

ஒரு "நான்" என்பதன் தியாகத்தால் முடிவற்ற பிறப்புக்களை (படைப்புக்களை) துறக்கலாம்; ஏனெனில் "நான்" என்பதே உலகம் முழுவதையும் தரித்து நிற்கிறது. 23

"நான் கட்டுப்பட்டவன்" என்பதில் உள்ள "நான்" தான் "நான் முக்தன் - விடுதலை பெற்றவன்", "நான் ப்ரம்மம்" என்பதிலும்

உள்ளது. இந்த "நான்" என்பதின் நாசமே உண்மையில் முக்தியாகும். 24

உலகம், ஜீவாத்மா, பரமாத்மா இந்த மூன்றும் ஒன்றே. ஆனால் அஹம்தா (நான்) என்பதன் காரணத்தால் மூன்றாகக் காணப்படுகின்றன. 25

உண்மையில் உடலுடனான தொடர்பின்மையே நமக்குத் தேவை. சமுதாயத்தின் தொடர்பின்மையால் 'நான்' (தனித்தன்மை) என்பது அழிவதில்லை. மாறாக உறுதிப்படுகிறது. 26

நமது ஸ்வரூபமோ சின்மயமான இருப்பு மட்டுமே; அதில் 'நான்' என்பது அறவே இல்லை. இந்த உணர்வு தோன்றி விட்டால் இதே கணம் ஜீவன்முக்தி* பெறலாம். 27

போராட்டம் என்பது ஜாதி காரணமாகவோ, மதம் காரணமாகவோ தோன்றுவதில்லை. ஆனால் அஹங்காரத்தின் விளைவுகளான தன்னலம், செருக்கு இவற்றின் அடிப்படையில் தான் ஏற்படுகின்றது. 28

தன்னிடத்தில் தனிச்சிறப்பைக் காண்பதால் அஹங்காரம், அளவிற்கு உட்பட்ட தன்மை, உடலில் அபிமானம் இவை உறுதி பெறுகின்றன. 29

பகவானிடத்தில் தோன்றிய படைப்பு உண்மையில் பகவானின் ஸ்வரூபமே. ஆனால் ஜீவனின் அஹம்தா, பற்று, ஆசை இவை காரணமாக அதை உலகு வடிவமாகச் செய்துவிடுகிறது. 30

---

★ **மனித வாழ்வு முடியுமுன்னரே முக்தி பெறுதல்.**

# நமது இலக்கு

எதற்காக மனிதப்பிறவி கிடைத்ததோ அந்த பரமாத்மப்ராப்தியே லக்ஷ்யமாகி விட்டால் அம்மனிதனை உலகியலின் வெற்றி, தோல்விகள் பாதிப்பதில்லை. 31

நோயாளியின் நோக்கம் உடல்நலம் பெறுவதே. அது போன்றே மனிதனின் நோக்கம் ஆன்மிக மேன்மை பெறுதலே, உலகியல் சார்ந்த வெற்றி, தோல்விகளுக்கு முதன்மை தராமல், அவற்றில் சமநோக்கு உள்ளவனின் லக்ஷ்யம் முழுமை பெற்றதாகிறது. 32

ஸாதகனின் ஒரே நோக்கம் பரமாத்மப்ராப்தி என்று ஆகி விட்டால், அவனிடம் உள்ள பொருள், சூழ்நிலை ஆகியவை ஸாதனைக்கான ஸாமக்ரிகளாகி விடுகின்றன. 33

பரமாத்மப்ராப்தி ஒன்றே உறுதியான நோக்கம் என்றாகி விட்டால் அந்தக்கரணம் எத்தனை விரைவாக எவ்வாறு தூய்மை பெறுகின்றதோ, அத்தனை விரைவில் அவ்வாறு வேறு எந்த ஸாதனங்களாலும் தூய்மை பெறாது. 34

புலன்களின் மூலம் விலங்குகளும் இன்பநுகர்ச்சியில் ஈடுபடுகின்றன; ஆனால் அதுபோல் போகங்களை நுகர்வது மனிதப் பிறவியின் நோக்கமன்று; இன்ப துன்பங் களற்ற. தத்வத்தை அடைவதே மனிதப் பிறவியின் நோக்கமாகும். 35

கர்மயோகம், ஞானயோகம், த்யானயோகம், பக்தியோகம் ஆகிய எல்லா ஸாதனங்களிலும் உறுதியான தீர்மானம் - நோக்கம் மிகவும் தேவையான ஒன்று. தனது ஆன்மிக உயர்வுக்கான தீர்மானமே உறுதிபெறவில்லையென்றால் ஸாதனங்களால் ஸித்தி பெறுவது எங்ஙனம்? 36

பரமாத்மப்ராப்தி ஒன்றே நோக்கமாகி விட்டால், எந்த ஒரு ஸாதனையும் சிறியதென்றோ, பெரியதென்றோ தோன்றாது. 37

உண்மையில் பரமாத்மாவை அடைவதென்பது தவிர மனிதப்பிறவியால் பெறும் பயன் பிறிதொன்றுமில்லை. இப்பெரும் பயனை - நோக்கத்தைக் கண்டறிந்து முழுமை பெறச் செய்வதே தற்போதைய தேவை. 38

புகழ் பெறுவதே மனிதனுக்கு மேலான குறிக்கோளாக இருத்தல் வேண்டும். அதற்றவனை உண்மையில் மனிதனென்றே கருதக்கூடாது.* 39

## மேன்மை

இல்லாத பொருளையோ, நிலையையோ அடைவதையே மேன்மை, பெருமை, நிறைவு, ஆற்றல் எனக் கருதுவது பெருந்தவறாகும். தற்போது இல்லாத ஒரு பொருள் கிடைத்த பின்னர் எப்போதும் இருக்காது. இது நியதி. எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும், இருக்கப் போகும் பொருளான பரமாத்ம தத்வத்தை அடைவதே மேன்மை, நிறைவு, ஆற்றல் எல்லாமும். 40

ஆன்மிகத்தில் மேன்மை பெறுபவனின் உலகியல் முன்னேற்றமும் தானே நிகழ்கிறது. 41

யோசித்துப் பார். நம்மைப் பற்றிய ஆய்வை நாமே அசட்டை செய்தால் நமக்கு மேன்மை கிடைப்பது எப்படி? 42

---

**★ நல்ல நோக்கமே மனிதனுக்குப் புகழ் தருவது, எந்த ஒரு நோக்கமும் இல்லாதவன் மனிதன் என்றே கூறவே தகுதியற்றவன். (தோன்றிற் புகழோடு தோன்றுக - திருக்குறள்)**

உண்மையான உயர்வு - இயல்பு தூய்மை பெறுதல் 43

உலகியலில் உயர்வு உடனே நிகழ்வுறும் நிகழ்காலச் செயலன்று; மறுமைக்கான உயர்வும் எதிர்காலத்தில் நிகழ்வுறும் செயலன்று. 44

ஓய்வை விரும்புபவன் உண்மையில் உயர்வுற மாட்டான். 45

வானில் ஓங்கி வளரும் மரத்துக்கும் எல்லை இல்லை. மனிதன் பெறும் மேன்மைக்கும் எல்லை இல்லை. 46

உலகியல் தொடர்பால் விளையும் சுகத்தின் நாட்டமே, ஆன்மிக மேன்மையில் மிகவும் ஊறுவிளைவிக்கும். 47

மனிதனின் உயர்வும், தாழ்வும் எண்ணத்தில்தான். பொருள், சூழ்நிலை இவற்றில் அல்ல. 48

புத்தியைப் பின்பற்றி மனமும் மனத்தின் வழியே புலன்களும் சென்றால் உயர்வு ஏற்படும்; ஆனால் புலன்கள் வழியே மனமும், மனத்தின் வழியே புத்தியும் அமைந்தால் தாழ்வுதான். 49

## தனிமை (ஏகாந்தம்)

உடல், புலன்கள், மனம், புத்தி இவற்றுடன் தான் (ஸ்வயம்) தொடர்பு கொள்ளாதிருப்பதே உண்மையான ஏகாந்தம். 50

தனிமையோ. கூட்டமோ ஸாதகன் தன் ஸாதனைக் கேற்ற சூழ்நிலையமைய வேண்டும் என எதிர்பார்க்கக் கூடாது; ஆனால் கிடைத்த சூழ்நிலைக்குத் தக்கவாறு ஸாதனையை அமைத்துக் கொள்ள வேண்டும். 51

தனிமையை விரும்புபவன் சூழ்நிலையைச் சார்ந்து நிற்கிறான். சூழ்நிலையைச் சார்ந்து இருப்பவன் போகி; யோகி ஆக மாட்டான். 52

ஸாதகன் மக்கள் கூட்டத்திலும் பற்று வைக்கக் கூடாது; தனிமையிலும் பற்று வைக்கக் கூடாது. உய்வு சூழ்நிலை காரணமாக ஏற்படுவதன்று; பற்றற்று இருப்பதால் ஏற்படுவது. 53

ஜனங்கள் அற்ற இடத்திற்குச் செல்வதும், தனித்து இருப்பதும் ஏகாந்தம் என்று கருதுவது பெரும் பிழையாகும். ஏனெனில் ஸம்ஸாரம் முழுமைக்குமான விதையாகிய உடலோ கூடவே இருக்கிறது. உடலுடன் தொடர்புள்ள வரையில் ஸம்ஸாரத்துடனான தொடர்பும் அமைந்து விடுகிறது. 54

உடலும் உலகின் ஒரு கூறு தான். ஆகவே உடலின் தொடர்பு நீங்குவது தான் - அதாவது நான், எனது என்ற வாஸனைகள் அழிவது தான் உண்மையான ஏகாந்தம். 55

ஸாதகனுக்குத் தனிமையில் சுவை எற்படுவது நல்லது தான்; ஆனால் அதிலும் பற்று, பிடிவாதம் கொள்வது தான் தவறு. தனிமையில் தீராத வேட்கை எற்பட்டால் தனிமை கிடைக்காத போது மனம் சலனமுறும். அதனால் ஸம்ஸாரத்தின் முக்கியத்துவம் உறுதி பெறும். 56

## கடமை

மனிதன் ஒவ்வொரு சூழ்நிலையிலும் கடமை காக்க முடியும். தொண்டு, அதாவது ஸம்ஸாரத்தினால் கிடைத்துள்ள உடல் முதலிய பொருட்களை உலகின் நன்மைக்காக ஈடுபடுத்துவதுதான் கடமையின் உண்மையான வடிவம். 57.

தனது கடமையைச் செவ்வனே நிறைவேற்றும் மனிதன் தன் சித்தத்தில் இயல்பான நிறைவைப் பெறுகிறான். மாறாகத் தனது கடமையை ஆற்றாத மனிதனின் மனம் இயல்பாகவே கவலைக்கு இடமளிக்கிறது. 58

ஸாதகன் உடல், புலன்கள், மனம், புத்தி இவற்றை தனது என்றோ, தனக்காக என்றோ கருதாமல் அவை உலகு சார்ந்தவை, உலகுக்கானவை என்றே கருதி முழு ஈடுபாட்டுடன் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்தொழுகினால் பற்று நீங்கியவனாகிறான். 59

தற்காலத்தில் இல்லங்களிலும், சமுதாயத்திலும் காணப்படும் அமைதியின்மை, கலகம், போராட்டம் இவற்றுக்கு மூல காரணம் மக்கள் தத்தம் கடமைகளில் ஈடுபடாமல் தமது உரிமைகளை மட்டும் நிலைநிறுத்திக் கொள்வதில் ஈடுபடுவதேயாகும். 60

கடமைகளில் எதுவும சிறிதோ, பெரிதோ அல்ல. மிகச் சிறிதாகிலும் சரி, மிகப் பெரிதாகிலும் சரி, கடமை என்ற கருத்தில் (தொண்டுள்ளத்துடன்) செய்யப்பட்டால் அவை எல்லாமே ஒன்றுதான். 61

பிறர் நன்மைக்காகச் செய்யப்படும் பணியே கடமை; எவருக் கேனும் தீமை விளைந்தால் அது கடமையன்று. 62

ஒரு கடமை சிரமமாகவோ, கடினமாகவோ தோன்றக் காரணம் விருப்பு-வெறுப்பே. 63

எதைச் செய்ய வேண்டுமோ, எதைச் செய்ய இயலுமோ அதுவே கடமை. கடமை காக்கத் தவறுவது குழப்பத்தின் விளைவு. குழப்பம் தமோ குணம். தமோ குணமே நரகம். ''நரகஸ்தமஉந்நாஹ:'' (பாகவதம் 11/19/43) 64

தனது சுகத்துக்காகச் செய்யப்படும் கர்மம் ''அஸத்'', பிறர் நலனுக்காகச் செய்யப்படுவது ''ஸத்''. அஸத் கர்மத்தின் பயன் பிறப்பும் இறப்பும். ஸத் கர்மத்தின் பயன் பரமாத்மாவை அடைதல். 65

மிக உயர்ந்த செயல்களைச் செய். ஆனால் ஸம்ஸாரம் நிலையானது (உண்மை) என்ற எண்ணத்துடன் செய்யாதே. 66

பற்றின்றி இருப்பவனால்தான் முழு ஈடுபாட்டுடன் தனது கடமைகளைச் செவ்வனே நிறைவேற்ற இயலும். 67

மற்றவர் பக்கம் நோக்கம் கொள்பவன் கடமையில் ஈடுபட்டவனாக (கர்த்தவ்ய நிஷ்டனாக) மாட்டான். பிறர் கடமையைப் பார்ப்பது கடமையாகாது. 68

இல்வாழ்வானோ, துறவியோ - தனது கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றுபவனே சிறந்தவன். 69

தனக்காகச் செயல்பட்டால் "அகர்த்தவ்யம்" (கடமையின் உண்மை நிலையிலிருந்து நழுவுதல்) தோன்றுகிறது. 70

தனது கடமைகளைச் செவ்வனே செய்வதால் வைராக்யம் ஏற்படுகிறது. (ராமசரிதமானஸம் 3/16/1) ஒருகால் வைராக்யம் ஏற்படாவிட்டால் தனது கடமைகளைத் தான் ஒழுங்காகச் செய்யவில்லை என்று அறிந்து கொள்ள வேண்டும். 71

நமது கடமை பற்றிய அறிவு நம்மிடமே உள்ளது. ஆனால் பற்று, எனது என்ற எண்ணம் இவை இருப்பதால் நமது கடமைகளை நிர்ணயிக்க இயலாதவராகிறோம். 72

நான்கு வர்ணங்கள், நான்கு ஆசிரமங்கள் இவையனைத்திலும் கடமை காப்பவனே உயர்ந்தவனாகிறான். கடமையிலிருந்து வழுவியவன் தாழ்ந்தவனாகிறான். 73

தனது கடமைகளைச் செவ்வனே நிறைவேற்றுவதற்கே உலகுடனான தொடர்பு; தனது அதிகாரங்களைப் பெருக்கிக் கொள்வதற்கன்று, மற்றும் சுகம் பெறுவதற்காகவும் அன்று. 74

உய்வு பெறுவது ஒன்றே நமது நோக்கமானால் அறநூல்களைக் கற்காமலேயே நமது கடமைகள் பற்றிய நல்லறிவு ஏற்படும். உய்வதற்கான நோக்கம் இல்லையெனில் அறநூல்களைக் கற்றாலும் கடமைகள் பற்றிய தெளிவு பெற இயலாது. மாறாக 'நான் அறிந்தவன்' என்ற அஞ்ஞானமே வளரும். 75

## உய்வு பெறுதல்

எனக்கென எதுவுமில்லை; எனக்கு எதுவும் வேண்டாம்; எனக்காக நான் எதுவும் செய்து கொள்ள வேண்டாம். - இம்மூன்றுமே உய்வு தரும் விஷயங்கள். 76

நாம் உய்வு பெறுவதே பகவானுக்கு எண்ணம். நாம் நமக்கென ஒரு எண்ணமும் கொள்ளாதிருந்தால் பகவானின் ஸங்கல்பப்படி தானாகவே உய்வு பெறுவோம். 77

மனிதன் உய்வு பெறுவதற்கு மாறான சூழ்நிலை ஸம்ஸாரத்தில் ஒருபோதும் கிடையாது. காரணம் ஒவ்வொரு சூழ்நிலையிலும் பகவான் ஒரே சீராக விளங்கி வருகிறார். 78

உய்வு பெறுவது மிகவும் எளிதானது. ஆனால், உய்வு பெறும் ஆசையே இல்லையெனில் உய்வுபெறுவதெப்படி? 79

உலகியல் சார்ந்த வேலைகளை யாரும் செய்யலாம். ஆனால் தான் உய்யும் வழியைத் தானே தேடிக்கொள்ளவேண்டும். தான் உண்டால்தான் தன் பசி தீரும். தான் மருந்தருந்தினால் தன் நோய் தீரும் என்பது போல. 80

உய்வு பெறும் உபாயம் தேடப் புதிய சூழ்நிலையை உருவாக்கத் தேவையில்லை. கிடைத்த சூழ்நிலையையே நல்லவிதத்தில் பயன்படுத்தினால் உய்வு பெற இயலும். 81

உய்வு பெறுவதற்குச் செயல்கள் காரணமல்ல. எண்ணங்களும், விவேகமுமே உய்வு தரும். 82

இல்லத்திலிருப்பவர் அனைவருமே தம்மைப் பணியாளராகவும், மற்றவரைப் பணி பெறுபவராகவும் கருதினால் அனைவரும் பயன் பெறலாம்; அனைவருமே உய்வு பெறலாம். 83

போகங்களில் நாட்டம் பிறப்பிறப்பைத் தரும். பகவானிடத்தில் நாட்டம் உய்வு தரும். 84

தனது உய்வை நாடுபவன் உண்மையான உள்ளத்துடன் பிரார்த்தனை புரிந்தால் எம்பெருமானின் ஸந்நிதியின் கதவு தானே திறந்து கொள்ளும். 85

ஒருவன் உய்வு பெறுவதற்குப் பின்னணியாக ஒரு அடியவரின் கருணையோ, பகவானின் கருணையோதான் காரணமாக இருக்க முடியும். 86

உலகில் அடியார்களுக்கோ, அறிவுரைகள் நல்குபவர்களுக்கோ பஞ்சம் இல்லை. ஆனால் ஒருவன் உய்வடைவதற்கு அவனது ஈடுபாடும், ஆர்வமும், ஆவலும், ஒருமைப்பாடும் சிரத்தையுமே காரணமாகின்றன. 87

## ஆசை

ஸாதகனுக்குத் தனது இன்பம், ஓய்வு, மரியாதை, புகழ் முதலிய ஆசைகள் இருக்கும் வரை அவனது உடல்சார்ந்த தன்மை அழியாது. அந்த வ்யக்தித்வம் அழியாதவரையில் தத்வத்துடன் ஒன்ற இயலாது. 88

நமது அந்தக்கரணத்தில் எவ்வித ஆசையும் இல்லையெனின் பகவத்ப்ராப்திக்கான விருப்பம் கொள்ளத் தேவையில்லை. பகவான் தாமே கிடைத்து விடுகிறார். 89

உலகியல் ஆசையால் விலங்குத் தன்மையும், பகவானிடம் ஆசைகொண்டால் மனிதத் தன்மையும் துவங்குகின்றன. 90

'நான் நினைத்தது நடக்க வேண்டும்' - இதுவே ஆசை எனப்படுவது. இதுவே துயரத்திற்குக் காரணம். இதைத் துறக்காமல் யாரும் இன்பம் பெற இயலாது. 91

'எனக்கு இன்பம் எப்படி ஏற்படும்?' - இந்த விருப்பம் ஒன்றினாலேயே மனிதன் கடமை தவறியவனாகவும், வீழ்ச்சியுற்றவனாகவும் ஆகிறான். 92

ஆசை கிளர்ந்தெழும் கணத்திலேயே மனிதன் தன் கடமையிலிருந்து, தன் ஸ்வரூபத்திலிருந்து, தனக்கினிய பகவானிடமிருந்து மாறுபட்ட திசையில் சென்று, அழியும் தன்மை உடைய உலகியலுக்கு உட்படுகிறான். 93

ஸாதகனுக்கு உலகியல் ஆசைகள் நிறைவேறும் விருப்பமும் கூடாது. பரம்பொருளைப் பெறும் ஆசை நிறைவேறுவதில் நிராசையும் கூடாது. 94

ஆசைகளைத் துறப்பதில் அனைவருமே சுதந்திரமானவர், தகுதிபெற்றவர், திறமை பெற்றஅதிகாரி ஆவர். ஆனால் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதில் யாருமே சுதந்திரமானவர், தகுதி பெற்றவர், திறமை பெற்றவர் அல்லர். 95

எந்த அளவு ஆசைகள் அழிகின்றனவோ அந்த அளவு துறவுத் தன்மை முதிர்ச்சி பெறுகிறது. எந்த அளவு ஆசைகள் வளர்கின்றனவோ அந்த அளவு துறப்பதில் வீழ்ச்சி; துறவுத் தன்மை இல்லாததற்கு மூல காரணம் ஆசைதான். 96

ஆசைப்படுவதால் மட்டுமே யாதொரு பொருளும் கிடைத்து விடுவதில்லை. அப்படியே கிடைத்தாலும் அது நிலைத்து இருப்பதில்லை. இது கண்கூடாகத் தெரிந்தும் பொருட்களில் ஆசை கொள்வது அறிவின்மைதான். 97

நுகர்வதின் விருப்பத்தால் வாழ்வு துயர் நிரம்பியதாகிறது. வாழ்வதின் விருப்பத்தால் மரணம் துயர் நிரம்பியதாகிறது. 98

உலகியல் ஆசைகளை நிறைவேற்றிக் கொள்வதில் தொடர்ந்து முயற்சி, வாழ்வதன் விருப்பத்தால் மரணத்திலிருந்து தப்ப முயற்சி. ஆனால் இவை எல்லாம் நிறைவேறுவதுமில்லை. மரணத்தை வெல்லவும் முடிவதில்லை. 99

ஆசையைத் துறப்பதில் எல்லோருக்கும் சுதந்திரம் உண்டு, யாரையும் சார்ந்து இல்லை. ஆனால், ஆசையை முழுமையாக நிறைவேற்றுவதில் அனைவரும் பிறரைச் சார்ந்தே இருக்கின்றனர், யாருக்கும் சுதந்திரம் கிடையாது. 100

இன்பத்தில் நாட்டம், விருப்பம், போகம் இம்மூன்றுமே துயரமனைத்துக்கும் காரணமாகும். 101

அழியும் பொருட்களின் மீதான ஆசையை விட்டால், அழியாத தத்வம் பெறலாம். 102

'இவ்வாறு ஆகவேண்டும், இவ்வாறு ஆகக்கூடாது' என்ற எண்ணங்கள் அனைத்துமே துயர் நிரம்பியவைதான். 103

'நான் பெருமை பெறவேண்டும்' இந்த ஆசைதான் சிறுமையைத் தந்துவிடுகிறது. 104

மனத்தின்கண் ஒரு பொருளின் மீது ஆசை கொள்வதுதான் வறுமை; பெறுவதில் ஆசைகொள்பவன் ஏழையாகவே இருந்து விடுகிறான். 105

அழிவதின்மீது வைக்கும் ஆசையால் மனம் அழுக்கடைகிறது. 106

மனிதன் செயல்களைத் துறக்க வேண்டாம்; ஆசைகளைத் துறந்தால் போதும். 107

எந்த ஒரு பொருளும் மனிதனை அடிமைப்படுத்துவதில்லை; அதன்மீதான ஆசையே அடிமைப்படுத்துகிறது. 108

அமைதியை விரும்பினால் ஆசைகளைத் துறந்துவிடு. 109

ஏதோ ஒன்றைப் பெற விரும்பினாலும் கொடிய துயரம் விளையும். 110

எவனுக்கு அகத்தே விருப்பம் உள்ளதோ அவன் யாரிடமாவது கட்டாயம் கட்டுப்பட நேரும். 111

தனக்கான இன்பத்தை விழைதல் அரக்கத்தனம், அசுரச் செயல். 112

விழையாமலேயே ஸம்ஸாரத்தில் துயரம் நேர்வதுபோல், தானாகவே இன்பமும் கிடைக்கிறது; ஆகவே, ஸாதகன் ஒருபோதும் உலக இன்பத்தில் நாட்டம் கொள்ளக்கூடாது. 113

போகமும், ஸங்க்ரஹமும் (புலனுகர்ச்சியும், பொருள் சேர்ப்பதும்) தவிர வேறு எதுவும் பாவம் செய்யத் தூண்டும் காரணமாய் அமைவதில்லை. எனவே ஆசையைத் தியாகம் செய்ய வேண்டியது அவசியம். 114

தனக்காகப் புலனுகர்ச்சியிலும், பொருள் சேர்ப்பதிலும் இழியும் மனிதன் விலங்கினும் தாழ்ந்தவனாகிறான். இவ்விருப்பங்களைத் துறப்பவன் அமரரிலும் உயர்ந்து நிற்கிறான். 115

நமதேயான பொருள் நமக்குக் கிடைக்கவே செய்யும். அதை வேறு யாரும் எடுத்துச் செல்ல முடியாது. ஆகவே, ஆசையைத் துறந்து கடமையாற்ற வேண்டும். 116

'நான் விரும்பும்படியே நடைபெற வேண்டும்' இந்த ஆசை இருக்கும்வரை அமைதி கிட்டாது. 117

மனிதன் அறிவு பெற்றவனான பிறகும், தோன்றி அழியும் பொருட்களையே விரும்புகிறான். இது வியப்புக்குரிய விஷயம். 118

உடலின் இருப்பைத் தனது இருப்பாகக் கொள்வதால் தான் அழியும் பொருட்களில் ஆசை ஏற்படுகிறது. இந்த ஆசையின் விளைவாலேயே உடலில் தனது இருப்பு உறுதி பெறுகிறது. 119

சிறிது ஆசை கொள்வதால் சில கிடைக்கின்றன, சில கிடைப்பதில்லை. ஆனால், சிறிதும் ஆசைப்படாவிட்டால் எல்லாம் கிடைத்து விடுகிறது. 120

நாம் புகழை விரும்புவதால் இகழ்ச்சி தீயதாகப் படுகிறது. நாம் புகழை விரும்பினால் அதற்குத் தகுதி பெற்றவராக மாட்டோம். ஏனென்றால் புகழுக்குத் தகுதி வாய்ந்தவனுக்குப் புகழில் விருப்பம் இருப்பதில்லை. 121

மற்றவரால் போற்றப்படும் விருப்பம் ஒரு குறைபாடு. இதனால் போற்றத் தகுந்தவனாயிரு. ஆனால் புகழ்ச்சியை விரும்பாதே. 122

உலகியல் இன்பங்களை என்றாவது ஒருநாள் கட்டாயம் துறந்துதான் ஆகவேண்டும்? பின் இதில் தாமதம் ஏன்? 123

முடிந்தவரை பிறரது ஆசைகளை நிறைவேற்ற முயற்சிசெய். ஆனால் அவரிடம் இருந்து எதையாவது பெறும் ஆசை கொள்ளாதே. 124

யோசித்துப்பார்! எவரிடமிருந்து நீ சுகம் பெற விழைகிறாயோ அவன் எப்போதும் சுகமாக இருக்கிறானா? அவன் துன்புறுவதில்லையா? துக்கமடைபவன் எவ்விதம் சுகமடையச் செய்ய முடியும்? 125

ஆசைகள் அற்றுப் போவதால் கிடைக்கும் இன்பம், ஆசைகள் நிறைவேறுவதால் ஒருபோதும் கிட்டாது. 126

பரமாத்மாவிடம் மேலான ஈடுபாட்டை விழைந்தால் உலகியலின்பாலுள்ள ஆசையை விட்டொழி. 127

மாறிவரும் உலகில் இச்சை கொள்பவனும், அதில் இன்பம் விழைபவனும் மாறுதலுக்குட்படுவான். அதாவது பற்பல பிறவிகளிலும் பிறந்து மடிய நேரிடும். 128

எதை நம்முடனே எப்போதும் வைத்திருக்க இயலாதோ அதைப் பெற விழைவதிலும், பெறுவதிலும் என்ன பயன்? 129

குறைபாடுதான் ஆசைக்குக் காரணம். ஆசையில்லையெனில் குறைபாடும் மறைந்துவிடும். 130

ஆசைகளை முற்றிலும் துறந்து விட்டால் தேவையான பொருட்கள் தாமே வந்தடையும். ஏனெனில் பொருட்கள் ஆசையற்ற மனிதனிடம் வரத் துடித்துக் கொண்டுள்ளன. 131

இன்பத்தைத் துய்ப்பதற்காகப் பொருட்களை விழைபவன், அவற்றின் இன்மையால் வருந்த நேரிடும். 132

யாருடைய உள்ளத்தில் சிறிதும் ஆசைகள் இல்லையோ, அவருடைய தேவைகளை இயற்கை தானே நிறைவேற்றி விடுகிறது. 133

எந்தப் பொருட்கள் நம்முடன் எப்போதும் இருப் பதில்லையோ, எவற்றுடன் நாம் எப்போதும் இருக்க மாட்டோமோ, அவற்றை அடைய ஆசை கொள்வதும் அவற்றின் மூலம் சுகத்தைப் பெறுவதும் அறிவின்மையாகும். அது வீழ்ச்சியைத் தரும். 134

**இன்பத்தின் இச்சையில் இன்பம் கிடைப்பதில்லை - இது நியதி. 135**

**இல்லறத்தோனாயினும் சரி, துறவியாயினும் சரி-ஆசை உள்ளவரையில் அமைதி கிட்டாது. 136**

அமைதியை விரும்பினால் 'இப்படி நடைபெற வேண்டும், இப்படி நடக்கக்கூடாது' என்பதை விட்டு விடு. 'பகவான் விரும்புவது நடைபெறட்டும்' என்பதை ஏற்றுக் கொண்டு விடு. 137

ஆசையின் விளைவினால் செய்யப்படும் அனைத்துமே 'அஸத்'. அவற்றின் பயனும் அழிவதாகவே இருக்கும். 138

சிறிதளவு ஆசையும் அடிமைத்தனம். எதையும் விரும்பாதது விடுபட்ட நிலை. 139

பொருட்கள் நம்மிடம் இல்லாததால் நாம் பாக்கியம் செய்யாதவர் என்பதில்லை. நாம் பகவானின் அம்சமான போதும் அழியும் பொருட்களில் ஆசை வைப்பதுதான் நமது துர்பாக்யம். 140

இன்பத்தின் விழைவுதான் இரட்டை (த்வைதம்). இன்பத்தில் இச்சையில்லாவிட்டால் இரட்டை (த்வைதம்) இல்லை. 141

உடல் நமது என்ற எண்ணம் உள்ளவரையில் நமது ஆசைகள் அழியா. 142

யோசித்துப் பார்க்கலாம். ஆசைகள் நிறைவேறினாலும், நிறைவேறாவிட்டாலும் நாம் அப்படியேதான் இருக்கிறோம் எனில் ஆசை நிறைவேறுவதால் என்ன லாபம்? நிறைவேறாவிட்டால் என்ன நஷ்டம்? நம்மில் என்ன மாற்றம் ஏற்பட்டு விட்டது? 143

## குருவும் சீடனும்

உலகுக்கு குருவாக அமைபவன் உலகுக்கு அடிமையாகிறான். தனக்குத் தானே குருவாகுபவன் உலக குருவாகிறான். 144

உய்வு பெறுவதில் தனது ஈடுபாடுதான் பயன்தருகிறது. தனது ஈடுபாடு இல்லையெனில் குருவோ, அறநூல்களோ என்ன செய்ய இயலும்? 145

நம்மிடம் எதையோ எதிர்பார்ப்பவன், எப்படி நமக்கு குருவாக முடியும்? 146

மகனையும், சீடனையும் தன்னிலும் மேம்பட்டவனாகச் செய்யுமாறு அறநூல்கள் விதிக்கின்றன. தனக்கு அடிமை கொள்ளும்படி அவை கூறவில்லை. 147

குருவை ஒரு மனிதனாகக் கருதுவதும், ஒரு மனிதனை குருவாக எண்ணுவதும் பெருங் குற்றம். ஏனெனில் குரு என்பது ஒரு தத்துவம். மனித உடலுக்கு குரு என்ற பெயர் கிடையாது. 148

சீடன் கிடைப்பது அரிது; குரு அல்ல. பணியாளன் அரிது, முதலாளி அல்ல. முக்தியை விழைபவன் அரிது, முக்தி அல்ல. பக்தி அரிது, பகவான் அல்ல. 149

நம்மிடம் பணம், காசு, சுகம், மரியாதை, பணிவு, பூஜை நல்ல உபசாரம், இவற்றில் எதையோ பெற விழைபவன் நம்மை உய்விக்க இயலாது. 150

உலகம், ஜீவாத்மா, பரமாத்மா இம்மூன்றையும் உள்ளபடி அறியாததுதான் அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்தை அழிப்பவரே குரு. 151

குரு சீடனுக்காக; சீடன் குருவுக்காக அல்லன். மன்னன் மக்களுக்காக; மக்கள் மன்னனுக்காக அல்லர். 152

பகவான் ஜகத்குருவாக விளங்குகின்றபோதும், மனிதனை சீடனாக்கிக் கொள்ள விரும்புவதில்லை; தம்முடைய தோழனாக்கிக் கொள்கிறார். 153

குரு சீடனுக்குப் புதியதாக ஒரு ஞானத்தைத் தருவதில்லை; ஆனால் முன்பே அவனிடம் ஒளிர்ந்த எந்த ஒரு ஞானம் உண்டோ அதை ஒளிரச் செய்கிறார். 154

உண்மையான ஒரு குரு அடுத்தவனையும் குருவாக்கிப் பார்க்கிறார்; அவனைச் சீடனாகவே இருக்கச் செய்வதில்லை. அடுத்தவரைச் சீடர்களாக்குபவன் 'சிஷ்யதாஸன்' ஆகிறான். 155

நமது உண்மையான குரு நமக்குள் இருக்கிறார். அவர் நமது விவேகம்தான். இதைத் தந்தருளியது பகவான்தான். பகவான் நாம் உய்ய மனித உடல் தந்தார்; மற்ற ஸாதன - ஸாமக்ரிகள் தந்தார் என்றால் குருவை மட்டும் தராமல் இருப்பாரா? 156

## துயரம்

உடலைக் காப்பதற்காகத் துயரமடையத் தேவையில்லை. உடல் அழிந்தபின் யாது நேரும்? - இதைப் பற்றிச் சிந்தை கொள்வதுதான் தேவையானது. 157

நடக்க வேண்டியது நடைபெறவே செய்யும். நடக்க இயலாதது ஒருபோதும் நடைபெறாது. இதில் வீண் கவலை ஏன்? 158

நமக்காக என்று எதுவுமே தேவையில்லை. ஏனென்றால் ஸ்வரூபமான ஆத்மாவில் அபாவம் கிடையாது. மேலும் உடலுக்குத் தேவையானது ப்ராரப்த வினைப்பயனாக ஏற்கெனவே முடிவு செய்யப்பட்டதுதான். இதில் வீண் கவலை ஏன்? 159

பகவானிடமிருந்து நமது வாழ்வுக்கான ஏற்பாடு செய்யப்பட்டுவிட்டது. போகங்களுக்கான ஏற்பாடு அன்று. ஆகவே வாழ்வுக்கான கவலையோ, போகங்களில் ஆசையோ ஏற்படக்கூடாது. 160

'பகவான் என்ன செய்தாலும், (நிகழ்காலத்திலும், எதிர்காலத்திலும்) அது எனது நலனுக்காகவே' - என்ற உறுதியான விசுவாசத்துடன் ஒவ்வொரு சூழ்நிலையிலும் கவலை கொள்ளாதிருக்க வேண்டும். 161

துயரம் - கவலை இவற்றுக்கான காரணம் பொருட்கள் இல்லாமை அன்று. அறிவின்மைதான். இந்த அறிவின்மை ஸத்ஸங்கத்தால் நீங்கும். 162

மனிதன் எவ்வகையிலெல்லாம் தனது உடல் சார்ந்த கவலைகளை விடுகிறானோ அவை பற்றி உலகம் கவலை கொள்ளத் தொடங்குகிறது. 163

பகவானிடம் நம்பிக்கை கொள்வதனால் எவ்வகையான துயரமும் நிலை பெறுவதில்லை. 164

செய்யத் தகாததைச் செய்வதனாலும், செய்யத் தக்கதைச் செய்யாததனாலும் துயரமும், அச்சமும் விளைகின்றன. 165

பகவான் நம்மைக் காட்டிலும் கருணை மிக்கவர்; நம்மிலும் அறிவு மிக்கவர்; நம்மிலும் ஆற்றல் மிக்கவர்; இவ்வாறிருக்க நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? 166

## எச்சரிக்கை

மரணத்திற்கான பொருட்கள் எல்லாம் தயார். மூடுகின்ற துணி தயார். புதிதாக நெய்யத் தேவையில்லை. சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்ல மனிதர்கள் தயார்; இனிமேல் தான் அவர்கள் பிறக்க வேண்டும் என்பதில்லை. எரியூட்டும் இடமும் தயார்; புதிதாக ஏற்படுத்த வேண்டாம். எரிப்பதற்கான விறகுகள் தயார்; இனிமேல் தான் மரம் நட்டு வளர்க்க வேண்டுமென்பதில்லை. மூச்சு நிற்க வேண்டும். அதற்கும் வெகுநேரமாகாது. மூச்சு நின்றால் போதும், இந்த ஸாமக்ரிகள் ஒன்று திரண்டு விடும். பின் கவலையற்று எப்படி உட்கார்ந்திருக்கிறாய்? 167

**எண்ணிப்பார்! இவ்வுலகம் எப்போதும் வாழ்வதற்கானதன்று. இங்கு மாய்ந்து மடிபவர்கள்தாம் உள்ளனர். பின் காலை நீட்டிக்கொண்டு ஏன் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்? 168**

ஆராய்ந்து பார்! இவ்வாழ்நாட்கள் தொடர்ந்து இப்படியே இருக்குமா? 169

இங்கு வீடு கட்டிக் கொள்கிறாய்; அலங்கரித்துக் கொள்கிறாய். சேமித்து வைக்கிறாய். ஆனால் நீயோ மரணத்தை நோக்கி ஓடிச் சென்று கொண்டிருக்கிறாய். எங்கு சென்று சேரவேண்டுமோ முதலில் அதைச் சீர் செய்துகொள். 170

குறித்த நேரத்தில் செல்லும் வண்டிக்காக வெகுநேரம் முன்னதாகவே எதிர்பார்த்து நிற்கிறோம். மரண வண்டிக்கோ காலம் எதுவும் குறிப்பிடப்படுவதில்லை. அதற்கோ எந்தவொரு வினாடியும் தயாராக இருக்கும் தேவை உள்ளது. 171

'செய்வோம்' இது முடிவாகாத ஒன்று. 'சாவோம்' இது முடிவான ஒன்று. 172

நீங்கள் பகவானைப் பார்ப்பதில்லை; பகவானோ எப்போதும் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறார். 173

வருபவன் சென்றுதானாக வேண்டும். இது நியதி. 174

கால வடிவான நெருப்பில் அனைத்துமே ஓயாது எரிந்து கொண்டிருக்கின்றன. பின் எதை நம்புவது? எதை விரும்புவது? 175

'நமக்கு யார்? மரணத் தருவாயில் நமக்கு உதவுபவர் யார்?' இதை ஆராய்ந்து பார். 176

பிறந்தநாள் வந்தால் இத்தனை வயது என மகிழ்ச்சி கொள்கிறீர். ஆனால் இத்தனை ஆண்டுகள் வாழவில்லை. இத்தனை ஆண்டுகள் மாய்ந்து விட்டீர். அதாவது நமது ஆயுளில் இத்தனை ஆண்டுகள் முடிந்துவிட்டன. மரணம் நெருங்குகிறது என்பது பொருள். 177

குழந்தை பிறந்து விட்டால், அது பெரிதாகுமா? கல்வி பெறுமா? மணமாகுமா? மக்கள் பிறக்குமா? பணக்காரனாகுமா? - இதெல்லாம் சந்தேகமே. ஆனால் கட்டாயம் ஒருநாள் மாண்டு போகும். இதுமட்டும் நிச்சயம் இதில் சந்தேகம் எதுவும் இல்லை. 178

## தத்துவ ஞானம்

பரமாத்ம தத்வம் பற்றிய அறிவு பொறி-புலன்களைச் சார்ந்தது அன்று. ஆகவே பரமாத்ம அனுபவம் தனக்குத் தானாகவே தோன்றக்கூடும். புலன்கள், மனம், புத்தி ஆகிய கரணங்கள் மூலமாக அன்று. 179

அழியும் பொருட்கள் மெய்யாகத் தென்படும் வரையில், மெய்யறிவு ஏற்படாது. 180

மெய்யறிவு தோன்றிவிட்டால் தன்னில் குற்றங் குறைகள் இரா; தன்னில் யாதொரு தனிச்சிறப்பையும் காணமாட்டான். 181

நமது ஸ்வரூபமாக இல்லாததைத் துறந்தால் (அதன் தொடர்பை நீக்கிவிட்டால்), நமது ஸ்வரூபத்தைப் பற்றிய போதம் (மெய்யறிவு) ஏற்படும். 182

ஸாதகனுக்கு அத்வைதம், த்வைதம் என்று மரபு சார்ந்த பிடிப்பு எதுவும் இருத்தல் கூடாது; அதனால் மெய்யறிவு ஏற்படாது. 183

'நான்' என்பது உள்ளவரை தத்வஞானம் பற்றிய கர்வமும் ஏற்படும்; உண்மையான தத்வஞானமும் ஏற்படாது. 184

தன்னில் விருப்பு-வெறுப்பு உள்ளவரை தத்வபோதம் ஏற்படவில்லை என்றறிய வேண்டும்; விஷயங்களை மட்டும் தெரிந்து கொள்ளலாம். 185

தத்வபோதம் ஏற்படுவதற்குப் பல பிறவிகள் எடுக்க வேண்டாம்; தீவிர நாட்டம் இருந்தால் நிமிஷத்தில் ஏற்பட்டுவிடும். ஏனெனில் தத்வம் எங்கும், எப்பொழுதும் விளங்கிக் கொண்டிருப்பது. 186

தத்வஞானம் வெறும் பயிற்சியினால் ஏற்படாது; தனது விவேகத்துக்கு முதன்மை தருவதாலேயே ஏற்படும்; பயிற்சியினால் ஒரு புதிய நிலை உருவாகலாம்; தத்வஞானம் கிடைக்காது. 187

தத்வ ஞானம் தோன்றும்வரை, எல்லா ஜீவர்களும் சிறைப்பட்டவர்தாம். 'தன் விருப்பப்படித் தீச்செயல்களைச் செய்வது, பின் பிறர் விருப்பப்படி துன்பத்தை அனுபவிப்பது' - இதுவே கைதியின் இலக்கணம். 188

'நான் ப்ரம்மம்' இது அத்யாத்ம அனுபவமன்று. ஆனால் அஹம்க்ரஹ உபாஸனை. ஆகவே தத்வஞானம் ஏற்பட்டுவிட்டால் 'நான் ப்ரம்மம்' என்ற அனுபவம் தோன்றாது. 189

தத்வஞானம் ஏற்பட்டபின் காமம், கோபம் இவை முற்றிலும் இல்லையென்றாகிவிடும். 190

நமது பார்வையில் 'அஸத்'திற்கு இருப்பு உள்ளவரை விவேகமும் இருக்கும். அஸத்தின் இருப்பு அழிந்ததும் அந்த விவேகமே தத்வஞானமாகப் பரிணமிக்கும். 191

தன்னிலும், மற்றவரிடத்தும் குறைகளற்ற தன்மையை, உணர்வதே தத்வஞானம்; அதுவே ஜீவன்முக்தி. 192

தத்வஞானம் ஏற்பட்ட பின் ஞானி (நன்றும், தீயதுமான) சூழ்நிலைகளற்றவனாக மாட்டான். ஆனால் (அவை தரும்) இன்ப-துன்பங்களற்றவனாகி விடுவான். 193

தத்வஞானம் உடலுக்கு அழிவை ஏற்படுத்தாது; ஆனால் உடலின் தொடர்புக்கு - நான், எனது என்ற எண்ணங்களுக்கு அழிவை ஏற்படுத்தும். 194

தத்வஞானம் - அஞ்ஞானத்திற்கு அழிவு, ஒரே ஒரு முறைதான் ஏற்படும்; ஆனால் எப்பொழுதும் நிலைத்து நிற்கும். 195

உள்ளதை உள்ளபடி உணர்ந்து கொள்வதற்குப் பெயர் தான், 'ஞானம்'; அதற்கு மாறான நிலைக்குப் பெயர் 'அஞ்ஞானம்' 196

## துறத்தல்

துறப்பது பற்றிய சிறிதளவு அபிமானமும் ஏற்படாதிருக்கும் பொழுதுதான் துறத்தல் என்பது முழுமை பெறும். துறக்கப்படும் பொருளைப் பற்றிய பெருமை மனத்தில் வேர் ஊன்றி இருக்கும் போது அபிமானம் ஏற்படுகின்றது. எனவே பொருளைத் துறப்பதைக் காட்டிலும், அதன் மீது பெருமை கொள்வதைத் துறப்பதே மேலானது. 197

யாரிடமாவது சிறிதளவாவது பயன்பாட்டை எதிர்பார்த்தாலும் அது உண்மையான துறவாகாது. 198

காமம், க்ரோதம், நான்-எனது என்ற எண்ணம் இவற்றை விடாது பற்றிக் கொண்டிருக்க நாம் அறிவது போன்றே இவற்றை விடுவதற்கான வழியையும் நாம் அறிவோம். ஆனால் அவற்றைவிட விரும்புவதில்லை. ஆகவேதான் அவற்றைத் துறக்கத் திறமையற்றவர் போல் தென் படுகிறோம். 199

ஆசையைத் துறப்பதால் முக்தி; பொருளைத் துறப்ப தாலன்று. 200

(ஆன்மிக நோக்கில்) உடல் எப்பொழுதும் நமக்குப் பயனாவதில்லை. ஆனால் உடலில் "நான்-எனது" என்ற எண்ணத்தைத் துறத்தல் மிகவும் பயன் தருகிறது. 201

உடலும், உலகும் தாமாகவே விடுபட்டுக் கொண்டிருப்பவை; இவற்றால் நன்மை ஏற்படுவதில்லை. விட்டகலும் பொருட்களை விட்டுவிட்டால் - அவற்றில் நான் - எனது என்பதை விட்டொழித்தால், உய்வு பெறலாம். 202

உள்ளத்தில் பணத்துக்குப் பெருமை இருப்பதால், அதைத் துறப்பதில் தனித்த சிறப்புத் தோன்றுகிறது; துறப்பதில் பெருமிதம் ஏற்படுகிறது. துறப்பதில் உள்ள அபிமானத்தில் நாம் பணத்துக்குத் தரும் பெருமை வெளியாகிறது. 203

துறப்பதால் நாம் உயர்வு பெறுகிறோம்; பொருளும் தூய்மையாகிறது. போகத்தால் நாம் வீழ்ச்சி பெறுகிறோம். நுகர்பொருளும் அழிவடைகிறது. 204

மனிதன் தன்னளவில் போகியாக இருந்துகொண்டு மற்றவரிடம் த்யாகத்தைக் காண விழைகிறான். இது பெருத்த அநியாயம். தியாகியிடம் அவனுக்கு மதிப்பிருந்தால் அவன் தானே ஏன் தியாகியாகக் கூடாது? 205

துறந்தோம் என்ற வ்ருத்தியையும் துறத்தலே உண்மையான துறவு. 206

## குற்றம் - குறைகள்

மாசற்ற வாழ்வை அனைவருமே அமைத்துக் கொள்ள முடியும். ஆனால் முழுமையாகக் குற்றம், குறைகளே நிரம்பிய வாழ்க்கை யாருக்குமே ஏற்பட இயலாது. ஏனெனில் ஜீவன் பகவானின் அம்சமாவதால் இயல்பாகவே மாசற்றவன்; மாசுகள் வந்து போகின்றவை, அழியும் பொருட்களின் சேர்க்கையால் வருபவை. 207

ஸாதகன் தனது குறைபாடுகள் களையத் தக்கவை என உணர்ந்து, அவை தரும் துயரத்தால் துயருற்று, அவற்றைப் பொறுக்க இயலாதவனாகும்போதே, அவை மறையத் துவங்குகின்றன. பகவானது கருணை அவற்றை விரைவிலேயே அழித்துவிடுகிறது. 208

குறைபாடுகளனைத்துமே அழிவுறும் பொருளுக்கு முதன்மை தருவதாலேயே பிறக்கின்றன. 209

வஞ்சித்தல் குற்றம். வஞ்சிக்கப்படுதல் குற்றமன்று. 210

அனைத்திலுமே பகவத்பாவனை கொள்வதால் குறைபாடுகள் எல்லாம் அழிந்துவிடுகின்றன. 211

மனநிறைவால் காமம், க்ரோதம், பேராசை மூன்றுமே நாசமடைகின்றன. 212

குறைபாடு என்பதற்குத் தனித்ததொரு இருப்புக் கிடையாது. குணங்களின் குறைவே குற்றம் எனப் பெயர் பெறுகிறது. 'அஸத்'துக்கு (ஸத்தா) இருப்பையும், முதன்மையையும் தருவதால் தான் அக்குறைபாடு ஏற்படுகின்றது. 213

மாறுபாடுகளனைத்துமே மாறுபாடு உள்ள உடலில்தான் தோன்றுகின்றன; மாறுதலற்ற ஆத்ம ஸ்வரூபத்தில் மாறுபாடே கிடையாது. 214

மூலமான குறைபாடு ஒன்று; அதிலிருந்தே எல்லாக் குறைகளும் தோன்றுகின்றன; அதுதான் உலகுடனான தொடர்பு. மூலமான குணமும் ஒன்றே, அதிலிருந்தே ஏனைய குணங்கள் தோன்றுகின்றன; அதுதான் பகவானுடனான ஸம்பந்தம். 215

பேராசை காரணமாகத் விரும்பும் பொருள்கள் கிடைப்பதில்லை. கிடைத்த பொருளும் நல்லமுறையில் பயன் படுத்தப்படுவதும் இல்லை. 216

# குறை காணுதல்

தன்னில் காணப்படும் குணங்கள் பற்றிய அபிமானத்தால் பிறரிடம் குறைகாண நேரிடுகிறது. பிறரிடம் குறை காண்பதால் தன்னிடம் அபிமானம் வளர்கிறது. 217

தனது குறைகளைக் களைய விரும்புபவன் பிறரிடம் குறைகாணக் கூடாது; பிறர் குறைகாணும் இயல்பால் தன்னிடமுள்ள குறைகள் வலிமை பெறுவதுடன், புதிய குறைகளும் ஏற்படுகின்றன. 218

பிறரிடம் குறை காண்பதால் நமக்கும் நன்மை ஏற்படுவதில்லை; பிறருக்கும் ஏற்படுவதில்லை. 219

அந்தக்கரணத்தின் தூய்மைக் குறைவால் பிறரிடம் உள்ள குறைகள் புலனாகின்றன. வானொலியைப் போன்றே குறை நிறைந்த அந்தக்கரணம் குற்றம் கண்டு பிடிக்கிறது. 220

நம்மிடம் யாரும் குறைகாணக் கூடாது என்று நாம் விரும்பினால் பிறரிடம் குறை காண நமக்கு ஏது அதிகாரம்? 221

பிறரிடம் தீமை காணாதிருந்தால், நன்மை உள்ளேயே தோன்றுகிறது; உள்ளிலிருந்து வெளிப்படும் நன்மை வலிமையானதாகவும், பரந்தும் இருக்கும். 222

நாம் நமது மாசற்ற தன்மையைக் காத்துக் கொள்ள விரும்பினால் நம்மிடமும் பிறரிடமும் குறைகாணாதிருப்போம். 223

குறை களைவதற்கான நோக்கத்தில் பிறர்பால் குறைகாண்பதில் தவறேதும் இல்லை; குறை காண்பதில் மகிழ்ச்சி கொள்வதுதான் பெருங்குற்றம். 224

எல்லோருடைய ஸ்வரூபமும் உண்மையில் குற்றமற்றதே. ஆகவே மகன், சீடன் ஆகியோரை ஸ்வரூபத்தில் மாசற்றவர் என்றும், அவர்களிடம் காணப்படும் குறைகள் இடையில் வந்தவை என்றும் கருதி, அவற்றைக் களைய முற்படவேண்டும். 225

பிறரிடம் குறை கண்டால் அவை அவர்களிடம் அழுத்தமாகப் படிந்துவிடும். ஏனெனில், குறை காண்பதால் நமது தியாகம், தவம், வலிமை ஆகியவை அவரிடம் அந்தக் குறைகளைத் தோற்றுவிக்க உதவுபவையாகிவிடும். இதனால் அவரும் குறைகளுள்ளவராகி விடுவார். நமக்கும் நஷ்டம். 226

## செல்வம்

பணத்தை அனைத்திலும் சிறந்ததாகக் கருதுவது, அறிவின் தடுமாற்றத்தைக் காட்டுகிறது. 227

அறத்திற்கு தனம் வேண்டாம்; மனம் போதும். 228

பணம் யாரையும் அடிமை கொள்வதில்லை; மனிதன் தானே அதற்கடிமையாகி, வீழ்ச்சியடைகிறான். 229

பணத்தால் யாரும் (ஸேட்)முதலாளியாவதில்லை. பிச்சைக்காரனாகத்தான் ஆகிறான். எப்போதும், எதுவும் தேவையற்றவனே சிரேஷ்டன் - உண்மையில் ஸேட் ஆகிறான். 230

தற்போது கிடைத்துள்ள பணம் நிகழ்கால வினைக்கான பயனன்று; ப்ராரப்தகர்மத்தின் பலன். தற்போது பணத்திற்காகச் செய்யும் வஞ்சனை, திருட்டு, மோசடி, பொய்-புரட்டு ஆகியவற்றுக்கான பலன் (தண்டனை) பின்னர் கட்டாயம் கிடைக்கும். 231

அநியாயமான வழியில் சேர்க்கும் பணம் நமக்கு உதவும் என்ற நியதி கிடையாது. ஆனால் அதற்கான தண்டனையை கட்டாயம் அனுபவிக்க நேரிடும் - இது நியதி. 232

பணம் தேவைப்படும் இடத்தில் மறுமை கிடையாது; அதற்கு அடிமைத்தனம்தான் கிடைக்கும். 233

தனது இன்னல்கள் நீங்குவதற்காகப் பணம் செலவழிப்பது போலவே பிறரது துயர் துடைப்பதற்காகவும் பணம் செலவு செய்தால்தான் பணம் வைத்துக் கொள்வதற்கான தகுதி உண்டு. 234

பணத்திற்கான மோசடி, பொய், புரட்டு, ஏமாற்று இவற்றால் எத்தனை தீங்கு விளையுமோ அந்த அளவு லாபம் கிடைக்காது. அம்முறையில் கிடைக்கும் பணமும் முழுக்கப் பயன்படும் என்றும் சொல்ல முடியாது. ஆகவே சிறிதளவு லாபத்துக்காகப் பெருமளவில் தீமைகளைத் தேடிக் கொள்வது என்ன அறிவீனம்? 235

மரணத்தின் பின் இயல்பே கூடவரும்; பணம் வராது. ஆனால் மனிதன் தன் இயல்பைச் சீரழித்துக் கொண்டு பணத்தைச் சேர்த்துக் கொண்டு வருகிறானே! புத்தி முழுமையாக அற்றுப் போயிற்றே! 236

பணம் கிடைப்பதால் மனிதன் ஸ்வாதீனமாவதில்லை; பணத்திற்குப் பராதீனப் படுகிறான். ஏனெனில், பணம் தன்னிலும் வேறான ஒரு பொருள். 237

பணம் படைத்தவனும் மெய்யடியவராக முடியும். ஆனால், பணத்தில் நாட்டமிருப்பின் ஆக முடியாது. 238

ஏழ்மை பணம் கிடைப்பதால் தீராது; பணத்தில் ஆசை அழிவதால் தீரும். 239

செல்வம் சேர்வதால் மனிதனுக்கு மரியாதை பெருகுவதில்லை; அறம் வளர்வதால் மரியாதை வளர்கிறது. 240

பணத்திலும் உயர்ந்தது பண்டம்; அதைக் காட்டிலும் உயர்ந்தவன் மனிதன்; அவனிலும் உயர்ந்தது விவேகம்; அதைக் காட்டிலும் உயர்ந்தது பரமாத்ம தத்வம். மனிதப் பிறவி அந்த ஸத் தத்வத்தை அடைவதற்கானது. 241

## பகவந்நாம ஜபம்

ஸாதகனுக்கு யாதொரு விஷயமும் புரியாமல் போனாலும், அவன் பகவானைச் சரண் புகுந்து கட்டாயம் பகவந்நாமஜபம் செய்யத் தொடங்க வேண்டும். 242

பகவந்நாம ஜபமும், கீர்த்தனமும் கலியுகத்திலிருந்து பாதுகாத்து உய்விக்கும் திறன் படைத்தவை. 243

திருநாம ஜபத்தில் முன்னேற்றத்திற்கான அறிகுறி நாமஜபம் இடையறாது நடைபெறுவதுதான். 244

நாமஜபத்தில் ருசி நாமஜபம் செய்வதால்தான் ஏற்படும். 245

நாமஜபம் அப்யாஸமன்று; பகவானை அழைக்கும் செயல். பயிற்சியில் உடல், புலன்கள், மனம் இவை முதன்மை பெறும். ஜபத்தில் ஸ்வரூபத்துக்கு முதன்மை. 246

நாமஜபம் எல்லா ஸாதனங்களையும் போஷிக்கும். 247

நாமஜபமோ அனைவருக்கும் பொதுவானது. நாவோ அவரவர் வாயினுள் உள்ளது; பின் ஏன் நரகம் செல்கின்றனர்? இது வியப்பிற்குரிய விஷயம். 248

பகவானுடையவராகவே ஆகி நாமஜபம் செய்வதில் உள்ள மஹிமை வெறுமனே ஜபம் செய்வதில் இல்லை; நாமஜபத்தில் நாமத்தை உடைய பகவானிடத்தில் கொள்ளும் ப்ரேமை முக்யம்; ஜபம் எனும் செயலுக்கு முக்யத்வம் இல்லை. 249

ஜபத்தின் எண்ணிக்கையில் கவனம் செல்வதால் ஜபம் உயிரற்றதாகிறது; பகவானிடம் கவனம் சென்றால் ஜபம் உயிர்

பெறுகிறது. ஆகவே ஜபம், கீர்த்தனங்களில் கிரியைக்கு முதன்மை தராமல் நமக்கு இனியவனின் பெயர் என்ற ப்ரேம பாவம் முதன்மை பெற வேண்டும். 250

ஸாதகன் பகவானின் எந்தப் பெயர் சிறந்தது, எந்த ரூபம் சிறந்தது என்பதை ஆராயாமல் தனக்கு எந்த ரூபம், எந்த நாமம் அதிகம் பிடிக்கும் என்று தன்னையே ஆராய வேண்டும். 251

## பாவமும் புண்ணியமும்

நமக்குத் தீங்கிழைப்பவர் உண்மையில் நமக்கு உதவியே செய்கிறார். ஏனெனில் அவர்தரும் தீமையால் நமது பாவம் அழிகிறது. 252

பிறருக்குத் தீமை செய்வதால் பாவம் நேர்கிறது என்பதோடன்றி அதைக் கேட்பதாலும், சொல்வதாலும் பாவம் ஏற்படுகிறது. 253

தனது உய்வுக்கான தீவிர ஆசையினால் ஸாதகனது பாவம் அழிகிறது. 254

பகவானிடம் முகத்தைத் திருப்பிக் கொண்டு உலகின் கவர்ச்சியில் ஈடுபடுவதை நிகர்த்த பாவம் வேறொன்றுமில்லை. 255

“நான் மேலும் பாவம் செய்ய மாட்டேன்” என்ற தீர்மானம்தான் பாவத்திற்கான உண்மையான கழுவாய். 256

மனிதப் பிறவியில் செய்யும் பாவக்குவியல் ஏனைய எண்பத்து நான்கு லக்ஷம் யோனிகளிலும் பிறந்து போகம் துய்ப்பதால் முடிவுறுவதில்லை; மேலும் எஞ்சி நின்று மறுபடியும் பிறப்பு-இறப்புக்கான காரணமாகிறது. 257

எப்பொழுது மனிதன் அனுகூலமான சூழ்நிலையில் இன்பத்தையும், மாறான சூழ்நிலையில் துன்பத்தையும் அடைகிறானோ, அப்போதே அவன் பாவ-புண்ணியங் களுக்குக் கட்டுண்டுவிடுகிறான். 258

அழியும் பொருட்களுக்குப் பெருமை தருதலே பந்தம் ஆகும். இதிலிருந்தே எல்லாப் பாவங்களும் ஏற்படுகின்றன. 259

இன்பத்தின் இச்சையால் பாவம் செய்யவிரும்பாவிட்டாலும் பாவம் நேரும். இன்பத்தின் ஈர்ப்பே பாவம் செய்யக் கற்றுத்தரும். ஆகவே பாவங்களிலிருந்து விலக விரும்பினால் இன்பத்தின் இச்சையைத் துறந்துவிடு. 260

மற்றவரைத் துன்புறுத்தித் தனது காரியத்தை சாதித்துக் கொள்ளும் வழக்கத்தால் பாவம் தோன்றுகிறது. முடிவில் தானே கட்டுப்பட நேர்கிறது. 261

மறைப்பதால் பாவமும், புண்யமும் சிறப்பான பலனைத் தருபவையாகின்றன. ஆகவே பாவச் செயலைப் பறைசாற்றி, புண்ணியச் செயலை மறைக்க வேண்டும். 262

ஒருவனை பகவானுக்கு ஆட்படச் செய்வதை நிகர்த்த சிறந்த புண்ணியச் செயலும், தானமும் வேறொன்றுமில்லை. 263

“நான் இன்பம் பெற வேண்டும்” இதுவே பாவங்களுக்கு வேர். 264

“பாவம் செய்துவிட்டு பின்னர் கழுவாய் தேடிக் கொள்ளலாம்” என்று வேண்டுமென்றே செய்யும் பாவச் செயல்களுக்குப் பிராயச்சித்தம் கிடையாது. 265

## மறுமைக்கான மார்கம்

**ஒவ்வொரு மனிதனும் பகவானை அடைந்தேயாக வேண்டும் - இன்றோ, பல பிறவிகள் கழித்தோ என்பதால் இதில் ஏன் நேரம் கடத்த வேண்டும்? 266**

உண்மையான உள்ளத்துடன் பகவானிடம் ஈடுபடும் ஸாதகனுக்கு முக்காலத்திலும் உள்ள மஹாத்மாக்களின் பரிவும், கிருபையும் கிடைத்துவிடும். 267

தன்னை முழுமையாக பகவானிடம் ஆழ்த்தும் ஸாதகனுக்கு அவனது மனம், புத்தி ஆகியவையும் தாமே அவரிடம் ஈடுபட்டுவிடும். தனியே அவற்றை ஈடுபடுத்த நேராது. 268

பரமார்த்திக மார்க்கத்தில் செல்லும் ஸாதகனுக்கு உலகியல் சார்ந்த செல்வம், பெருமை, புகழ், ஓய்வு ஆகியவை தடையாகத் தோன்றும்வரை அவற்றில் சுவையும், இன்பம் தேடும் ஆசையும் இருந்து வருவதாக அறிய வேண்டும். 269

உலகியலில் லாப நஷ்டங்களால் பாதிப்படையும் மனிதன் ஆன்மிக வழியில் முனைப்போடு முன்னேறமுடியாது. 270

பரமார்த்திக வழியில் விருப்பும், வெறுப்பும் ஸாதகனின் ஸாதன ஸம்பத்தைக் கவர்ந்துவிடும். 271

எவ்வழியிலாவது பகவானிடம் ஈடுபட்டுவிட்டால் பகவான் ஸாதகனைத் தாமே பார்த்துக் கொள்வார். 272

பரமாத்மாவிடம் ஈடுபட்டால் உலகியல் விவகாரமும் சீரடையும். உலகியலில் ஆழ்ந்தால் பரமாத்மாவை அடைய முடியாது. 273

பரமாத்மாவுடன் பேதபாவனையுடன் ஈடுபட்டாலும், அபேத பாவனையுடன் ஈடுபட்டாலும் ஒரே பலன்தான். முக்தி. 274

உலகியலில் லாபமும், நஷ்டமும் இரண்டும் உண்டு. பகவானிடம் லாபம் மட்டும்தான். நஷ்டம் கிடையாது. 275

உலகியலில் ஈடுபடும்போது எவரும் சேர்ந்து வரமாட்டார்கள். பகவானிடம் ஈடுபட்டால் அனைவரும் கூட இருப்பவர்கள் தாம். 276

தன்னலமிக்கவன் பரமார்த்திகத்திலும் தன்னலமே விழைகிறான். நல்ல ஸாதகன் உலகியலிலும் பரமார்த்திகத்தையே நிலைநாட்டுகிறான். 277

உலகியல் சார்ந்த இச்சைகள் உருவாகும்போதே பாரமார்த்திக வழியில் இருள் சூழ ஆரம்பித்து விடுகிறது. இந்நிலையில் ஸாதகன் விழிப்பாக இல்லையென்றால் இச்சைகள் மேலும் வலிமை பெறுகின்றன. அவை வளர்ச்சி பெற்றாலோ பாரமார்த்திக மார்கம் முழுமையாகக் காரிருளில் ஆழ்ந்துவிடுகிறது. 278

உலகியலில் சுவை அழிந்த கணமே மறுமைக்கான ருசி முழுதும் கிடைத்துவிடும். 279

உலகியலைப் பொறுத்தவரை, திருப்தியடையாவிட்டால் வீழ்ச்சி. பரமார்த்திகத்திலோ திருப்தியில்லாவிட்டால் வளர்ச்சி. 280

உலகியலில் 'செயலாற்றுவதால்' உயர்வு; பரமார்த்திகத்தில் 'செய்யாதொழிவதால்' உயர்வு. 281

உலகியலில் ஈடுபடுவதால் முழு வீழ்ச்சியும் ஏற்படுவதில்லை; உயர்வும் முழுமையாக இல்லை. பகவானிடத்தில் வீழ்ச்சி அறவே கிடையாது; உயர்வோ முழுமையாகக் கிடைக்கின்றது. 282

## ப்ராரப்த கர்மம்—முன்வினை

முன்வினைப் பயன் கவலைகளை அழிப்பதற்கானவை; உபயோகமற்று இருப்பதற்கன்று. 283

மனிதன் முன்வினைக்கேற்பப் பாவ-புண்ணியங்களைச் செய்வதில்லை. வினைப்பயன் மற்றொரு வினையாகாது. அதன் பயன் போகமே (இன்பமோ, துன்பமோ). 284

முன்வினையின் பணி இன்ப-துன்பங்களைத் தரும் சூழ்நிலைகளைத் தோற்றுவிப்பதே. அவற்றால் இன்ப-துன்பங்களையடைவதற்கோ, அல்லது பாதிப்படையா திருப்பதற்கோ மனிதன் மட்டுமே சுதந்திரம், உரிமை பெற்றவன். 285

ஒருவரும் தமது பாபத்துக்கு அதிகமான தண்டனையை அனுபவிப்பதில்லை. அனுபவிக்கும் துன்பமோ ஏதோவொரு பாபத்துக்கான தண்டனை தவிர வேறொன்றுமில்லை - இதுவே அனைத்துமறிந்த, அனைவர்க்குமினிய, அனைத்தாற்றலும் நிரம்பிய எம்பெருமானின் சீரிய நெறிமுறை. 286

எது நிகழ்கின்றதோ, சரியாகவே உள்ளது. சீர்கேடாக எதுவும் நிகழ்வதில்லை. ஆகவே செயலாற்றும்போது விழிப் புடனும், நிகழ்வதை நுகரும்போது இன்புற்றும் இருக்க வேண்டும். 287

அறநூல்களால் தடுக்கப்பட்டவற்றில் ஈடுபாடு முன்வினை காரணமாகவன்று; ஆசையின் தூண்டுதலால் நேர்வது. 288

'செய்வது' என்பது ஒன்று; 'நிகழ்வது' என்பது ஒன்று. இரண்டின் நடைமுறையும் மாறுபட்டவை. 'செய்வது' என்பது மனிதமுயற்சி காரணமாக ஏற்படுவது. 'நிகழ்வது' என்பது முன்வினை காரணமாக ஏற்படுவது. ஆகவே மனிதன் 'செய்வது' என்பதில் சுதந்திரமுள்ளவன். 'நிகழ்வது' என்பது அவன் கையில் இல்லை. 289

# ப்ரேமை

உலகியலில் ராகம் (பாசம்) அழியும்போதே பகவானிடம் அனுராகம் (ப்ரேமை) தோன்றிவிடுகிறது. 290

தனதேயான பொருட்களில் பாசம் ஏற்படுவதுபோல், பகவானைத் தன்னுடையவர் என ஏற்றுக் கொண்டுவிட்டால் அவரிடமும் ப்ரமை தோன்றிவிடும். 291

நித்யமாகவும், நிரந்தரமாகவும் விளங்கிவரும் பரமாத்மாவிடம் ப்ரேமை தோன்றாமல் நித்யமாக, நிரந்தரமாக மாறுதலுக்குட்படும் பொருட்களில் ஒருவன் ஆசை வைப்பது மிகவும் வியப்பைத் தருகிறது. 292

உலகியலில் பற்றுதல் உள்ளவரையில் பகவானிடம் உண்மையான ப்ரேமை வராது. 293

உலகியல் இன்பத்தில் பற்றுதலே பகவத் ப்ரேமைக்கு முக்கியமான தடை. இன்பத்தில் இச்சையைத் துறந்தால் பகவானிடம் ப்ரேமை தானே விழிப்புறும். 294

அழியும் பொருட்களால் ஈர்க்கப்படும் வரை எவ்வளவு ஸாதனைகள் செய்தாலும் அழியாப் பரம்பொருள்பால் ஈர்ப்பும், அதன் அனுபவமும் ஏற்படாது. 295

பகவானிடத்தில் அநந்ய ப்ரேமையின் மறுபெயரே ராதாதத்வம். உலகியலில் ஈர்ப்பு இருக்கும்வரை ராதாதத்வத்தின் அனுபவம் ஏற்படாது. 296

பகவானிடம் ஏற்படும் ப்ரேமையை நிகர்த்த பஜனை பிறிதொன்றுமில்லை. 297

ஸாதகன் தன் மன விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள விரும்பும் வரை அவனுக்கு ஸகுண பரமாத்மாவிடமோ, நிர்குண பரமாத்மாவிடமோ ப்ரேமை தோன்றாது. 298

பகவத் ப்ரேமை யாகம், தவம், தானம், நோன்பு, தலயாத்திரை போன்றவற்றால் கிடைக்காது; ஆனால் பகவானுடன் உறுதியாக ஒன்றுபடுவதால் கிடைக்கும். 299

தவத்தால் ப்ரேமை கிடைக்காது; தவவலிமை தான் கிடைக்கும். அநந்ய பாவத்தாலேயே ப்ரேமை ஏற்படும். 300

பகவத் ப்ரேமையில் உள்ள தனிச்சிறப்பு மிக்க ரஸம் ஞானத்தில் இல்லை. ஞானத்தில் அகண்ட (இடையறாத) ஆனந்தம். ப்ரேமையில் அனந்த (முடிவற்ற) ஆனந்தம். 301

வேற்றுமை மதத்தில் தான் இருக்கிறது; ப்ரேமையில் இல்லை. ப்ரேமை எல்லா மதங்களின் வாத விவாதங்களை விழுங்கி விடுகிறது. 302

பகவானிடம் ஏற்படும் ஈர்ப்பின் பெயரே பக்தி. பக்தி ஒருபோதும் முழுமை பெறுவதில்லை. மேலும் மேலும் வளர்ந்து கொண்டிருக்கும். 303

பகவத் ப்ரேமைக்கு அவரிடம் அநந்ய பாவனை வேண்டும்; பகவானை தர்சிப்பதற்குத் தீராத வேட்கை வேண்டும். 304

உலகியலைத் தெரிந்து கொண்டால் அதிலிருந்து வைராக்யம் ஏற்படும்; பரமாத்மாவை அறிந்து கொண்டால் அவரிடம் ப்ரேமை ஏற்படும். 305

எதை அடைவது மிகவும் தேவையான ஒன்றோ அந்தப் பரமாத்மாவிடம் ப்ரேமை கொள்; எதை விடுவது மிகவும் தேவையான ஒன்றோ அந்த உலகுக்குத் தொண்டுசெய். 306

இன்பம், தன்னலம் சிறிதளவும் இல்லாத இடத்திலேயே ப்ரேமை தோன்றும். 307

ப்ரேமை முக்தியிலும் மேம்பட்ட ஒரு பொருள். முக்தி வரையில் ஜீவன் ரஸத்தை அனுபவிப்பவனாகிறான்; ஆனால் ப்ரேமையிலோ ரஸத்தைக் கொடுப்பவன் ஆகிறான். 308

ஞானமார்க்கத்தில் துன்பம், சிக்கல் இவை அழிந்து ஸ்வரூபத்தில் நிலை பெறுகிறான்; அதில் எதுவும் கிடைப்பது இல்லை. ஆனால் பக்தி மார்க்கத்தில் கணந்தோறும் வளரும் ப்ரேமை கிடைக்கிறது. 309

ஞானமற்ற ப்ரேமை மயக்கத்தைச் சென்று சேர்கிறது; ப்ரேமையற்ற ஞானம் சூன்யத்தைச் சென்று சேர்கிறது. 310

உள்ளே பக்தி ஸம்ஸ்காரத்தைப் பெற்றவனும், ஹரிக்ருபையை அண்டியிருப்பவனும் முக்தியால் திருப்தி அடையமாட்டான். பகவானது க்ருபை அவனது முக்தி ரஸத்தைப் பின்தள்ளி, ப்ரேமை தரும் அநந்த ரஸத்தை அளித்து விடுகிறது. 311

தனது கோட்பாட்டில் வெறியும், பிறரது கோட்பாடுகளில் அசட்டை, கண்டித்தல், மதிப்பு தராமை முதலியன இல்லாதிருந்தால் முக்திக்குப் பின் பக்தி (ப்ரேமை) தானாகவே ஏற்படும். 312

இன்ப நுகர்ச்சிக்கு முடிவுண்டு. ஜிக்ஞாஸா (ஆன்மிகத் தேட்டம்)வுக்கு முடிவுண்டு. ஆனால் ப்ரேம வேட்கைக்கு முடிவில்லை. அது முழுமை பெறுவதுமில்லை. அது கணந்தோறும் வளர்ந்து கொண்டே இருக்கும். 313

உலகியலில் கவர்ச்சியும், வெறுப்பும் தோன்றும்; பரமாத்மாவிடம் ஈர்ப்பு மட்டும்தான். வெறுப்பு என்பதே இல்லை. அவ்வாறு ஒருவனுக்கு வெறுப்பு ஏற்பட்டால் அவன் உண்மையில் ஈர்க்கப்படவில்லை என்று பொருள். 314

உலகியல் கண்ணோட்டத்தில் பேராசை என்னும் கவர்ச்சியைத் தவிர செல்வத்தில் தனிச்சிறப்பு யாதொன்றுமில்லை;

அதுபோன்றே ப்ரேமையின்றி ஞானத்திற்குத் தனிச்சிறப்பில்லை. அதில் சூன்யவாதம் தோன்றலாம். 315

## தற்பெருமை

தோன்றி அழியும் பொருள்களை முன்னிட்டுத் தன்னிடம் பெருமையும், சிறுமையும் காண்பது தவறு; கீழ்த்தரமானதும் கூட. 316

தன்னைத் தாழ்வாகவும், பிறரை உயர்வாகவும் கருதுவதே உண்மையான உயர்வு; தன்னை உயர்வாகவும், பிறரைத் தாழ்வாகவும் கருதுவதே சிறுமை. 317

பிறருக்கு உயர்வளிப்பவனே உயர்ந்தவன்; பிறரைத் தாழ்த்துபவன் தானே தாழ்மையுறுகிறான்; அடிமையாகிறான். 318

செல்வம், நிலம், வீடு ஆகிய ஜடப் பொருள்களின் அடிப்படையில் பெருமை கொள்வது மதி பிறழ்ந்து விட்டதைக் குறிக்கும். 319

உலகியல் சார்ந்த பொருட்களின் அடிப்படையில் தற்பெருமை கொள்பவனை, அவையே துச்சமாக்கிவிடுகின்றன. 320

நாமே உயர்ந்தவர். செல்வம் நமது படைப்பு. அதன் காரணமாக உயர்வு பாராட்டினால், உண்மையில் அது உயர்ந்து நாம் தாழ்ந்து விடுகிறோம். செல்வத்துக்கோ மரியாதை; நமக்கோ அவமானம். 321

## பந்தமும் மோக்ஷமும்

உடல் சார்ந்த உலகியல் பொருட்களைத் தமது என்று கருதுவதே பந்தம். தமதன்று என்ற எண்ணம் முக்தி. தமது என்றோ, தமதன்று என்றோ கருதுவதற்கு அனைவருக்குமே சுதந்திரம் உண்டு. 322

உலகுடனான தொடர்புகளனைத்தும் விடுதலையும் தரும். கட்டுப்படுத்தவும் செய்யும். தொண்டுக்காகவே கொள்ளும் தொடர்பு வீடு பேற்றை நல்கும்; தன்னலம் தோய்ந்த தொடர்பு பந்தப்படுத்திவிடும். 323

மனித உடலைத் தவறாகப் பயன்படுத்துவது ஜீவனைக் கட்டுப்படுத்தும்; நல்ல பயன்பாடு முக்தியைத் தரும். தன்னலத்துக்காக மற்றவர்க்குத் தீமை செய்வது, மனித உடலின் தவறான பயன்பாடு. தன்னலம் துறந்து பிறர்க்கு நன்மை செய்வது மனித உடலின் நற்பயன்பாடு. 324

அழியும் பொருட்களுக்கு முதன்மை தருவது தான் பந்தம். 325

கிடைத்தவை தனதென்று கருதாதிருந்தால் முக்தி தானே ஸித்தித்து விடுகிறது. 326

அனுகூலம், பிரதிகூலம் இரண்டும்தான் உலகியல். அவற்றால் இன்ப-துன்பங்களையடைவது ஸம்ஸாரத்தில் பந்தப்படுத்துகிறது. பாதிப்படையாவிடில் முக்தி கிடைத்துவிடுகிறது. 327

உடல் உலகின் ஒரு கூறு (அம்சம்). நாமோ (ஆன்மாக்கள்) பரமாத்மாவின் அம்சம். ஆகவே உடலை உலகிற்கு அர்ப்பணித்துவிடு, அதாவது உலகின் பணியில் ஈடுபடுத்தி விட்டு, நம்மைப் பரமாத்மாவிடம் அர்ப்பணிப்போம். அப்படிச் செய்தால் இன்றே முக்தி. 328

முக்தியில் விருப்பம் இருப்பின் உடலின் இருப்பில் ஆசை தோன்றாது. அவ்வாறு ஏற்பட்டால், முக்திக்கான விருப்பம் அறவே இல்லை என்று பொருள். 329

நிஷ்காம பாவத்துடன் (பிறருக்காக) செயலாற்றுவதால் முக்தி கிடைக்கும். ஸகாமபாவத்துடன் (தனக்காக) செயல் புரிந்தால்

பந்தம். ஆகவே மனிதன் நிஷ்காம பாவபூர்வமாகக் தனது கடமைகளை ஆற்ற வேண்டும். 330

ஸம்ஸார பந்தத்திலிருந்து முக்தி பெற விழைந்தால், கிடைத்த பொருட்களில் எனது என்ற பற்றையும், கிடைக்காத பொருட்களில் ஆசையையும் துறக்கவேண்டும். 331

பகவானின் படைப்பு பந்தப்படுத்துவதுமில்லை. துயர் தருவது மில்லை. ஜீவனின் (நான், எனது என்ற) படைப்பில்தான் தீமைகளும், இன்னலும் ஏற்படுகின்றன. 332

செய்யத்தகாததைச் செய்வது, செய்ய இயலாததைப் பற்றி வருந்துவது - இவை இரண்டுமே முக்கியமான பந்தங்கள். 333

விரும்பும் பொருட்கள் கிடைப்பதும், கிடைக்காததும் பந்தத்துக்குக் காரணமல்ல. அவற்றுடன் தோற்றுவித்துக் கொள்ளும் தொடர்பே பந்தத்துக்குக் காரணம். 334

'உலகம் தனக்குத் தொண்டு புரியட்டும்' இந்த எண்ணம் பந்தத்துக்குக் காரணம். 'நான் உலகுக்குப் பணி புரிவேன்' இது மோக்ஷத்துக்குக் காரணம். 335

பந்தம் ஏற்படுவது செயல்களாலன்று; பற்றால். 336

கிட்டாத பொருட்களின் மீதான ஆசையும், கிடைத்த பொருட்களின் மீதான பற்றுமே பந்தத்துக்குக் காரணம்; அடிமைத் தனத்துக்கும் காரணம். 337

போகங்களின் மீதான ஆசை துறப்பதற்காக முக்தியை விரும்புவது அவசியம். ஆனால் முக்தி பெறுவதற்காக முக்தியை விரும்புதல் தடையை ஏற்படுத்தும். 338

மனிதன் கர்மங்களால் பந்தப்படுவதில்லை. அவற்றில் பற்றும், தன்னலமும் கொள்வதால் கட்டுப்படுகிறான். 339

தன்னலம் தோய்ந்த எந்த ஒரு கர்மமும் துச்சமாகவும், பந்தப்படுத்துவதாகவும் ஆகிறது. 340

மனிதன் எதுவரை தனக்காகவே கர்மம் செய்கிறானோ, அதுவரை கர்மங்களுக்கு முடிவே இராது; கட்டுப்பட்டுக் கொண்டே இருப்பான். இது தேர்ந்த முடிவு. 341

உலகியலுடனான தொடர்புள்ளவரை கர்மம் செய்வது, செய்யாதொழிவது இரண்டுமே பந்தப்படுத்தும் 'கர்மங்கள்' தான். 342

முக்தி ஆத்மாவுக்கு ஏற்படுவது; உடலுக்கன்று. ஆகவே முக்தி பெற்றால் உடல், உலகிடமிருந்து வேறாகாது. ஆனால் ஸ்வயம் (ஆத்மா) உடல் - உலகிடமிருந்து தனித்து நிற்கும். 343

முக்தி வெளித் துறவினால் ஏற்படாது; உள்ளிருக்கும் வைராக்யத்தால் விளைவது. 344

"நான் எதையும் பெற வேண்டியது இல்லை" இந்த ஒரு ஸங்கல்பத்தினால் முக்தி பெறலாம். 345

முக்தி ஸஹஜமானது; இயல்பானது. பந்தம் செயலின் விளைவு. 346

உண்மையில் முக்தனே முக்தி பெறுகிறான். கட்டுண்டவன் முக்தன் ஆவதில்லை. 347

## தீமையைத் துறத்தல்

ஸாதகன் யாரையும் தீயவராகக் கருதக் கூடாது; யாருக்கும் தீமை செய்யக் கூடாது; கெடுதல் எண்ணக் கூடாது; யாரிடமும் குறை காணக் கூடாது, யாரைப்பற்றிய குறையையும் கேட்கக் கூடாது; யாருடைய குறையையும் சொல்லக் கூடாது. இந்த ஆறு விஷயங்களையும் உறுதியுடன் கடைப்பிடித்தால் அவன் தீமையற்றவனாக ஆகி விடுவான். 348

யாரேனும் தீங்கிழைத்தால் நமது பல்லே நாவைக் கடித்துவிட்டதாகக் கருதி, பதிலுக்குத் தீங்கிழைக்கக் கூடாது. 349

தீமையைத் துறப்பதைக் காட்டிலும் நன்மை செய்வது அத்தனை முக்கியம் இல்லை. தீமையைத் துறப்பதால் நன்மை தானே ஏற்பட்டு விடுகிறது. தனியாக அதைச் செய்ய வேண்டாம். 350

நாம் நல்லது என்று கருதுவதை முழுக்க முழுக்கக் கடைப்பிடிக்கும் பொறுப்பு நமக்கு இல்லை. ஆனால் தீமை எனக் கருதுவதை முழுவதும் விட்டொழிக்கும் பொறுப்பு நமக்கு உண்டு. அதைத் துறப்பதற்கான வலிமை, தகுதி, அறிவு, ஆற்றல் அனைத்தையும் பகவான் நமக்குத் தந்துள்ளார். 351

வீரம் யாருக்கும் நன்மை செய்வதில் இல்லை. யாருக்கும் தீமை செய்யாதிருப்பதில் தான் உள்ளது. 352

உய்வு பெற விழைபவன் யாரிடமும் தீய எண்ணம் கொள்ளக் கூடாது. 353

பிறருக்குத் தீமை செய்ய எண்ணுவதால் அவருக்குத் தீங்கு நேரும் அல்லது நேராது எனக் கூறமுடியாது. ஆனால் கட்டாயம் நமது அந்தக்கரணம் மாசடைந்து விடும். 354

யாருக்காவது தீங்கு செய்தால் அவருக்கு நேரப் போவதுதான் நிகழ்ந்துள்ளது; நமக்குப் புதிய பாவம் கட்டாயம் ஏற்படும் என்பதை நினைவு கொள்ள வேண்டும். 355

நன்மையின் விளைவு வரையரைக்குட்பட்டது. தீமையைத் துறப்பதின் பயனோ எல்லை கடந்தது. 356

நல்லவனாவதற்கு யாதொன்றும் செய்யத் தேவை யில்லை. தீமையை முழுக்கத் துறப்பதன் வாயிலாக நல்லவனாகலாம். 357

# பக்தன்

பகவத்பக்தன் செயலாற்றுவதில்லை; கணந்தோறும் வழிபடுகிறான். ஒவ்வொரு செயலிலிலும் அவனுக்கு வழிபடும் எண்ணமே உள்ளது. 358

பகவானிடம் ஈடுபட்டவனை சாதாரண மனிதனாக நினைக்கக் கூடாது. பகவானது அரசவையைச் சேர்ந்தவன் அவன். 359

கருமியின் பார்வை பணத்தின் பக்கம். பக்தனின் பார்வை பகவானின் பக்கம். 360

தேவதைகள் தம்மை உபாஸிப்பவருக்கு (அந்த உபாஸனை முழுமையாக இருந்தால்) நன்மை-தீமைகளை ஆராயாமல் உபாஸகர் விரும்பும் பொருட்களை அளிப்பர். ஆனால் உயர்ந்த தந்தையாகிய பகவானோ தமது பக்தருக்கு அவர்தம் உயரிய நன்மையின் பொருட்டு தமது விருப்பப்படித் தாமே பொருட்களை அளிக்கிறார். 361

தமக்கு அடிமையாக விரும்புவோரை பகவான் தமது யஜமானராக்கி விடுகிறார். 362

பகவத் பக்தன் எத்தனை தாழ்ந்த இனத்தவனாயினும் சரி, அவன் பக்தியற்ற கற்றறிந்த அந்தணனிலும் சிறந்தவன். 363

பக்தனுக்கு பகவான் காட்டும் பரிவைப் போல், உலகில் யாரும் பரிவுகாட்ட முடியாது. 364

தன்னிடம் யாதொரு தனிச்சிறப்பையும் காணாத, தற்பெருமையற்ற பக்தனிடம் பகவானின் தனித்தன்மை-பெருமை இடம் கொண்டு விடுகிறது. 365

**சரணாகத பக்தன் தனியாக பகவானை வழிபடத் தேவையில்லை; அவன்மூலம் தானே, இயல்பாகவே வழிபாடு நிகழ்கிறது.** 366

பக்தன் பகவானை எந்த ரூபத்தில் காண விரும்பினாலும், பகவான் அவனது எண்ணத்திற்கிணங்க அவ்வாறே ஆகி விடுகிறார். 367

பக்தனை தேவன் என்று கூறினாலும் அது இகழ்ச்சிதான். ஏனெனில் அவனது தரம் அமரரிலும் உயர்ந்தது.* 368

ப்ரேம பக்தன் பகவானின் ப்ரபாவத்தால் கவரப் படுவதில்லை. ஆனால் அவரது பரிவினால் கவரப் படுகிறான். 369

ஒரு ப்ரேமியை மற்றொரு ப்ரேமியே புரிந்து கொள்ளமுடியும். ஞானியன்று. அவ்வாறிருக்க அஞ்ஞானி எவ்விதம் அவனைப் புரிந்து கொள்ள முடியும் ? 370

பக்தன் பகவானின் தொண்டில் ஆனந்தம் கொள்கிறான். பகவான் பக்தனின் பணியில் ஆனந்தமடைகிறார். 371

## பகவான்

பகவத் தத்வம் - பரமாத்ம தத்வம் ஒன்றே உண்மையான தத்வம். மற்றவை அனைத்தும் தத்வத்தைச் சேராதவை. 372

அந்தக் கரணத்தில் உலகியலுக்கு முதன்மை தரப்படும் வரை, பகவானுடைய முக்கியத்துவம் தெரிய வராது. 373

பகவானை மனம், புத்தி, புலன்களாலன்றி இவை தவிர்ந்த ஸ்வயம் ஆத்மாவினாலேயே அறிந்து கொள்ள இயலும். 374

நாம் மதிப்பளிக்கும் வெகு தொலைவிலுள்ள பொருட்களனைத்தைக் காட்டிலும் நமது உடல் வெகு தூரத்தில் உள்ளது; நாம் மதிப்பளிக்கும் வெகு அருகிலுள்ள பொருட்களனைத்தைக் காட்டிலும் பகவான் நமக்கு அண்மையிலுள்ளார். 375

*"விண்ணுளாரிலும் சீரியரே" - அருளிச் செயல்.

கிடைக்கும் ஒவ்வொரு பொருளும் விலகிவிடும். ஆனால் உணர்கிறோமோ, இல்லையோ நித்யப்ராப்தமான பரமாத்மதத்வம் எந்த ஒரு நிலையிலும் நம்மை விட்டு நீங்குவதில்லை. 376

உலகியல் என்பது இன்மையின் (அபாவம்) மறுவடிவம். செயல்களுக்கப்பாற்பட்ட பரம்பொருள் ஒன்றின் இருப்பினாலேயே இருப்பேயற்ற உலகமும் உள்ளது போல் தோற்றம் தருகிறது. 377

நாம் ''உள்ளது'' என்ற ஸத்தத்வத்தை, பரமாத்மாவைச் சார்ந்தது எனக் கருதாது, உலகு என்று ஏற்கின்றோம். இதுதான் தவறு. 378

உலகில் யாரும் வேலைக்காரனைத் தமது யஜமானனாக்குவதில்லை; ஆனால் பகவான் சரணாகத பக்தனைத் தம்முடைய தலைவனாக்கிக் கொள்கிறார். இப்பெருந்தன்மை பகவானிடமே உள்ளது. 379

நம்மைவிட்டு அகலாததாகவும், நாம் அதைவிட்டுப் பிரிந்து விட முடியாதபடியும் இருக்கும் ஒரே பொருள் பகவான்தான். 380

கணந்தோறும் மாறிவரும் உலகில் கொண்டுள்ள நம்பிக்கையே பகவானிடம் நம்பிக்கைகொள்ளவிடாமல் செய்கிறது. 381

ஆதவன் உதிக்கிறான்; உண்டாவதில்லை. அதுபோன்றே அவதார காலங்களில் பகவான் வெளிப்படுகின்றார். நம்மைப் போலப் பிறவிகள் எடுப்பதில்லை. 382

''பரமாத்மா இருக்கிறார்'' என்ற அளவு தெரிந்து கொண்டால் போதுமானது; ''எவ்வாறு இருக்கிறார்?'' - இதை அறிந்து கொள்ளத் தேவையில்லை. 383

பகவான் ஆற்றலனைத்தும் நிரம்பியவரானபோதும், நம்மைவிட்டு விலகிச் செல்லும் திறமையற்றவர். 384

பகவான் எங்குள்ளார்? இங்கு, அங்கு, எங்கு என்பவையேயற்ற இடத்தில் – இடம், பொருள், காலம், நபர் இவற்றுக்கு எப்போதும் அப்பாற்பட்டவராக விளங்குகிறார். 385

பகவான் எங்கும் கிடைப்பார். அவரைக் கொள்வதற்குத் தான் ஆள் இல்லை. தூண்கள் எங்கும் உள. ஆனால் ப்ரஹ்லாதாழ்வான் தான் தேவை. 386

பகவான் எங்குமே இல்லாமல் இல்லை. ஆனால் அவரைக் காண்பவர் தான் இல்லை. 387

உலகியலில் ஆழ்ந்தவன் ''இறைவன் எங்கே இருக்கிறார் ?'' என வினவுகிறான்; பரம்பொருளில் ஆழ்ந்தவன் ''இறைவன் எங்கு இல்லை?'' எனக் கேட்கிறான். 388

ஆதவனை யாதொன்றும் மறைப்பதில்லை; நமது பார்வைதான் மேகத்தால் மறைக்கப்படுகிறது. அது போலவே பகவானும் மறைபடுவதில்லை. நமது அறிவுதான் மறைக்கப்படுகிறது. 389

பகவான் ஜீவனைத் தமக்கு அடிமையாக்கிக் கொள்வதில்லை; அன்பனாக்கிக் கொள்ள விரும்புகிறார். 390

''ஸத்'' அஸத்துக்கு விரோதியன்று; மாறாக அதுவே அஸத்துக்கு இருப்புத் தருகிறது. ''ஸத்''தின் ஆராய்ச்சியே அஸத்துக்கு எதிரி. 391

''ஸத்''தின் துணையின்றி ''அஸத்''தைப் பார்க்க இயலாது; அஸத்தின் துணையின்றி ஸத்தை வர்ணிக்கவும் முடியாது. 392

பரமாத்ம தத்வத்தின் ‘‘வர்ணனை’’ இயலாத ஒன்று; ‘‘அனுபவம்’’ பெறக்கூடிய செயல். 393

பரமாத்மதத்வம் ஒன்று தவிர ஏனையவற்றை எத்தனை ஏற்றுக்கொண்டாலும் அத்தனையும் அஞ்ஞானமே. 394

ஜகந்நாதனான பகவான் இருக்க, தன்னை அநாதையாகக் கருதுவது தவறு. 395

மனிதனுக்கு ஈசனிடம் நம்பிக்கை மட்டும் தான் கொள்ள வேண்டும்; உலகில் நம்பிக்கையும், ஈசனிடம் ஆராய்ச்சியும் நாஸ்திகத்தில் முடியும். 396

ஸாதகனுக்கு முதலில் பகவான் தொலைவில் தென்படுகிறார்; பின்னர் அருகில் தென்படுகிறார்; பின்னர் தன்னில் காணப்படுகிறார். முடிவில் அவர் மட்டுமே காணப் படுகிறார். 397

பரமாத்மாவில் ஜீவனும், ஜீவனில் ஜகத்தும் உள்ளன. ஆகவே பரமாத்மாவுக்கு தனித்த இருப்பு உண்டு. ஜீவனுக்கும், ஜகத்துக்கும் தனித்த இருப்பு இல்லை. 398

இடம், பொருள், காலம், செயல், நபர், விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய மூன்று நிலைகள் (அவஸ்தைகள்), சூழ்நிலை, நிகழ்ச்சி இவை யாவும் அழிந்த பின் எது ஒன்று எஞ்சி நிற்குமோ அதுதான் பரமாத்ம தத்வம். 399

## பகவானின் கருணை

பசுவின் பால் பசுவுக்காக அன்று; மற்றவர்களுக்குத் தான். அதுபோலவே பகவானின் கருணை அவருக்காக அன்று, என்றும் நமக்காக. 400

பகவானின் அருள் பெற விழைந்தால் உன்னிலும் தாழ்ந்தவர்க்கு இரங்கு; அருளை வேண்டுகிறோம். ஆனால்

காட்டுவதில்லை. இது அநியாயம், நமது அறிவையே அசட்டை செய்யும் செயல். 401

அர்ஜுனனுக்கே மறுமுறை கேட்கக் கிடைக்காத ஸ்ரீமத் பகவத் கீதை நமக்கோ அனுதினமும் கேட்கவும், கற்கவும் கிடைத்துள்ளதே! என்னே பகவானின் பெருங்கருணை! 402

இன்றுவரை தோன்றிய மஹாத்மாக்கள் அனைவருமே பகவானின் கருணையால்தால் ஜீவன்முக்தராயும், ஞானிகளாயும், அடியார்களாயும் ஆகியுள்ளனர். தமது முயற்சியால் அன்று. 403

தானே விளங்கும் பரமபதப்ராப்தி நமது கர்மங்கள், முயற்சி, ஸாதனைகள் இவற்றால் ஏற்படாது; பகவானின் பெருங்கருணையால் தான் கிடைக்கும். 404

## பகவத் ப்ராப்தி

உண்மையான உள்ளத்துடன் பகவானை விரும்புபவன் எந்த வர்ணம், ஆசிரம், சூழ்நிலை இவற்றைச் சார்ந்தவனாயினும், எத்தனை கொடிய பாவியாயினும் எத்தனை தீய ஒழுக்கம் இருப்பினும், அவன் பகவானைப் பெற முழுமையான தகுதி பெற்றவன். 405

ஸாதகன் உலகில் ஆசை கொள்ளக் கூடாது; ஏனெனில் அது எப்போதும் இருப்பதில்லை பகவானிடம் நிராசை கொள்ளக் கூடாது; ஏனெனில் அவருக்கு இன்மை (அபாவம்) கிடையாது. 406

பகவானைப் பற்றிய விஷயத்தில் மனநிறைவு கொள்வதும், உலகியல் விஷயத்தில் மனநிறைவு கொள்ளாது இருப்பதும், பெரும் தீமையை விளைவிப்பவை. 407

நீரில் இருந்து எடுக்கப்பட்ட மீன் துடிப்பதைப்போல, பகவானுக்காகத் துடிப்பு ஏற்பட்டால் அவர் கிடைப்பதில் சிறிதும் தாமதம் ஏற்படாது. 408

பகவானை அடைந்தபின் வேறு எதையும் செய்வதற்கோ, அறிவதற்கோ, பெறுவதற்கோ தேவையில்லை. அதில்தான் மனிதவாழ்வின் முழுமை; அதுவே பயன். 409

"பகவான் எல்லா இடங்களிலுமுள்ளார்; ஆகவே இங்கும் விளங்குகிறார். எல்லாக் காலங்களிலும் உள்ளார்; ஆகவே இப்போதும் உள்ளார். எல்லாவற்றிலும் உள்ளார்; ஆகவே என்னிடமும் உள்ளார். எல்லாருக்காகவும் உள்ளார். ஆகவே எனக்காகவும் உள்ளார்" என்பதை ஸாதகன் சிந்தித்துணர வேண்டும். 410

பகவத் ப்ராப்திக்கான கழிவிரக்கமும், ஆர்வமும் விரைவில் நன்மை பயப்பது போல், ஆராய்ச்சிகள் நிரம்பிய ஸாதனைகள் விரைவில் நன்மை தரா. 411

தன்னில் பேராவல் தோன்றாமைதான், பகவத் ப்ராப்தியின் தாமதத்திற்கான காரணம். 412

ஒளிந்து பிடித்து விளையாடுங்கால் ஒளிந்து கொண்டுள்ள ஒரு சிறுவனைத் தேடும் மற்றவன் ஒளிபவனைக் கண்டு பிடித்து விட்டால் அவன் வெளியே வந்து விடுகிறான்; மேலும் மறைந்து கொள்வதில்லை. எங்கும் மறைந்து நிறைகின்ற பெருமானை ஸாதகன் கண்டறிந்தால் அவர் எதிரில் வந்து விடுகிறார். மேலும் மறைந்து கொள்வதில்லை. 413

எல்லா விதங்களிலும் பராமுகமாகிவிடும் ஸாதகன் தனக்கினிய பகவானைப் பெற்று விடுகிறான். 414

பகவத்ப்ராப்திக்கான எளிய வழி கிரியைகளில் இல்லை; ஈடுபாட்டில் உள்ளது. 415

தம்மைப் பெறுவதற்காகவே ஜீவனுக்கு பகவான் மனித சரீரத்தை மட்டுமின்றி, முழுத் தகுதியையும், ஸாதனங்களையும் தந்தருளியுள்ளார். அதுவும் அவனது வாழ்வில் பலமுறை தம்மைப் பெறும் அளவிற்கு. 416

கிளர்ந்தெழும் ஆர்வத்தின் குறைபாட்டினாலேயே பகவான் கிடைப்பதில் தாமதம். முயற்சியின் குறைபாட்டி னாலன்று. 417

நான்கு வர்ணங்கள், நான்கு ஆசிரமங்கள், ஜாதிகள், சமயக் கோட்பாடுகள் இவை ஒவ்வொன்றும் பகவானுடன் ஒரே சீரான தொடர்பு கொண்டவை. ஆகவே ஒருவன் தான் சார்ந்துள்ள நிலையிலேயே பரமாத்மாவைப் பெற இயலும். 418

''அஸத்''தை அண்டி நின்று, அதன் மூலம் ''ஸத்''தைப் பெற முயல்வது மாபெருந்தவறு. 419

எதற்காக மனித சரீரத்தைப் பெற்றுள்ளோமோ, அதைப் பெறுவது கடினம் என்றால் எளிதென்று எதைச் சொல்வது? 420

பகவானை தர்சிக்க என்ன வழி ? பகவானின் திருநாமங்களை ஓயாமல் ஜபித்துக் கொண்டு ''ப்ரபுவே ! நான் தங்களை மறக்காதிருக்க வேண்டும்,'' எனப் பிரார்த்தனை செய்தால், பகவானிடம் நமக்குப் பரிவு பெருகி, முடிவில் தாமே வெளிப்படுவார். 421

எதுவரையில் தனக்காக ஒரு சிறிதும் செய்துகொள்வதற்கோ, பெறுவதற்கோ இச்சை இருக்குமோ, அதுவரை நித்யப்ராப்த பரமாத்மாவின் அனுபவம் தோன்றாது. 422

பகவத் ப்ராப்தி, கிளர்ந்தெழும் ஆர்வம் ஒன்றினாலேயே ஏற்படும்; ஆர்வம் விழிப்புறாதிருக்கக் காரணம், உலக போகங்களில் உள்ள ஆசைதான். 423

க்ருதயுகம் முதலான யுகங்களில் மாபெரும் ரிஷிகளுக்கு எந்த எம்பெருமான் கிடைத்தாரோ அவரை இக்கலியுகத்தில் யாவரும் பெற முடியும். 424

சுக போகங்களை எப்போதும் பெற முடியாது. அனைவரும் பெற முடியாது. ஆனால் பகவானை எப்போதும் பெறலாம். அனைவரும் பெற முடியும். 425

பகவானைப் பெறுவதில் மனப்பான்மைக்கே முதலிடம்; செயல்களுக்கன்று. 426

பகவான் பிடிவாதத்தால் கிடைக்க மாட்டார்; உயரிய உண்மையான ஈடுபாட்டால் கிடைப்பார். 427

பரமாத்மாவைப் பெறுவதில் ஒருவனது எண்ணங்கள், நடத்தை இவற்றுக்கே முக்கியத்துவம் - ஜாதி, இனம் இவற்றுக்கல்ல. 428

பகவானைப் பெறுவதில் விவேகம், பாவம், பற்றைத் துறத்தல் இவை விலைமதிப்பற்றவை. வெறும் கிரியைகள் அல்ல.
429

ஒவ்வொரு செயலுக்கும் முதலும், முடிவும் இருப்பதால், அதனால் விளையும் பயன் எப்படி முடிவற்றதாக இருக்க முடியும்? ஆகவே முடிவற்ற (அனந்த) தத்வமான பரமாத்மா செயல்பாடுகளால் பெறத்தக்கவரல்லர். 430

பரமாத்ம ப்ராபதிக்கான மிகுந்த பேராவல் காரணமாக பிரிவு எனும் பெருந்தீ (விரஹாக்னி) ஒன்று தோன்றுகிறது. அது கணக்கற்ற பிறவிகளின் பாவக் குவியல்களைச் சுட்டெரித்து, பரமாத்மாவைப் பெறக் காரணமாகிறது. 431

உலகியலின் இச்சை, ஆசை, போகம் இம்மூன்றும் பகவத்ப்ராப்திக்கான மிகுந்த பேராவல் ஏற்படாமைக்குக் காரணமாகின்றன. 432

ஏதாவதொரு பொருள் அனைவருக்குமே ஒரே சீராகக் கிடைக்க முடியும் என்றால் அது பரம்பொருள் ஒன்றுதான். பரம்பொருள் தவிர்ந்த வேறு எந்தப் பொருளும் அனைவருக்கும் ஒரே சீராகக் கிடைக்க முடியாது. 433

நாம் பரமாத்மாவைத் தவிர வேறொன்றையும் அடைய முடியாது. வேறெதை அடைந்தாலும் அது இன்மைக்குள் சென்று அழிந்து விடும். 434

விஷயபோகம், உறக்கம், கேளிக்கை, உலகியல் நாட்டம், பேச்சில் சுவை — இவ்வைந்தின் நாட்டமும் அழிவுறும் போதுதான் பரமாத்ம தத்வத்தை உணர முடியும். 435

பகவானது பிரிவைப் பொறுத்துக் கொள்வது ஸாத்யமாவதால்தான் பகவத் ப்ராப்தியில் தாமதம் ஏற்படுகிறது. பகவானது பிரிவு பொறுக்கவொண்ணாததாகும் போது பகவான் கிடைக்க நேரமாகாது. 436

அஸத்தில் ஆசை, ஆசிரயம், நம்பிக்கை இருக்கும்வரை, ஸத்தின் அனுபவம் ஏற்படாது. 437

பரமாத்ம ப்ராப்தி உண்மையில் எளிதான ஒன்றே; அதில் ஈடுபாடின்மை காரணமாகவே அது கடினமாகத் தோன்றுகிறது. 438

பகவான் ''க்ரியாக்ராஹி'' (செயல்களை ஏற்பவர்) அல்லர். ஆனால் ''பாவக்ராஹி'' (பாவங்களை ஏற்பவர். ''பாவக்ராஹீ ஜனார்தன:-'' ஆகவே பாவத்தால் (அனன்ய பக்தியால்) தர்சனம் தந்தருள்வார். செயல்பாடுகளாலல்ல. 439

நிலையற்ற பொருட்களின் தொடர்பைத் துண்டித்து விட்டால், நிலையான தத்வம் தானே உணர்வதற்கெளிதாய் அமைகிறது. 440

ஒருவன் மனிதன் என்பதாலேயே பகவத்ப்ராப்திக்கான தகுதி பெற்றுவிடுகிறான். அவன் எந்த ஒரு சூழ்நிலையிலும் பகவானைப் பெற முடியும். 441

பகவத்ப்ராப்தியில் தாமதம் ஏற்படுவதில்லை. விஷய சுகங்களில் இச்சையைத் துறப்பதில்தான் தாமதம் நேர்கிறது. 442

பகவானைப் பெறுவதில் ஆவல் மட்டுமே இருந்தாலும் அவர் ப்ரகடனம் ஆவார்; அல்லது வேறு எந்த ஆசை இல்லாவிட்டாலும் அவர் ப்ரகடனம் ஆகி விடுவார்; இரண்டுமே அரைகுறையாக அமைந்துவிடக்கூடாது. 443

‘‘ஸத்’’தை அறிந்துகொள்; அறிந்துகொள்ளாமல் போ. ஆனால் எதை ‘‘அஸத்’’என்று அறிந்துகொள்கிறாயோ அதை முற்றிலும் துறந்து விடு. ‘‘ஸத்’’ வஸ்துவை அடைந்து விடுவாய். 444

பரமாத்மப்ராப்தியில் மனிதனுக்குள்ள முழு சுதந்திரம், வேறு எந்த முயற்சியிலும் கிடையாது. 445

பரமாத்மப்ராப்தி விஷயத்தில் ஸாதகனின் உள்ளார்ந்த ஈடுபாடு தவிர, ஏனைய உபாயங்கள் அத்தனை அவசியமில்லை. 446

பகவான் அந்தணன், அரசன், வணிகன், வேளாளன், ப்ரம்மசாரி, இல்வாழ்வான், வனம் வாழ்வான், துறவி இவர்களுள் எவர்க்கும் கிடைக்க மாட்டார். ‘‘பக்தன்’’ ஒருவனுக்குத் தான் கிடைப்பார். 447

செல்வம் பெறுவதில் செயலுக்கு முதன்மை. பகவானைப் பெறுவதில் பேராவலுக்கு முதன்மை. 448

பகவத்ப்ராப்தி கர்மங்களின் பயன் அன்று. பகவானின் கருணையின் பயன். ஆனால் பேரார்வம் தன்னிடமிருந்து விளைய வேண்டும். 449

உலகம் அரைகுறையானது. ஆகவே அதில் பெறும் சுகங்களும் அரைகுறையாகவே உள்ளன. பரமாத்மா முழுமையானவர்; அவரை முழுமையாகப் பெறலாம். 450

பகவானைப் பெறாதவன் வேறு யாதொன்றையும் பெறவில்லை; யாதொன்றையும் பெறவில்லை; யாதொன்றையும் பெறவில்லை; 451

போகத்திலும், பொருள் சேர்ப்பதிலும் காணும் சுவையே பகவானைப் பெறுவதற்கு மிகப் பெரிய தடை. பிறர்தம் இன்பத்தில் இன்புறுவதால் போகத்தில் நாட்டமும், துயரத்தில் துயருறுதலால் சேமிப்பில் நாட்டமும் அழிந்து விடுகின்றன. 452

இடையறாது மாறி வரும் உலகின்கண் நம்பிக்கை வைப்பதும், அதை உண்மை எனக் கருதுவதுமே பகவத் ப்ராப்திக்கான முக்கியமான தடை. 453

விஷயங்களின் சேர்க்கையால் பெறும் சுகத்தில் ஈடுபாடுகொள்வது, நித்யப்ராப்தரான பகவானை உணர்வதில் வலிமையான தடையை விளைவிக்கும். 454

பகவத் ப்ராப்திக்குத் தடையாவது பொருட்களல்ல. நாம் அவற்றுக்களிக்கும் பெருமையே. 455

தன்னலத்துக்காகக் கடமையாற்றுவதும், உடல் முதலான ஜடப்பொருட்களுடன் ஏற்றுக் கொண்ட தொடர்பும் எங்கும் நிறைந்த பரம்பொருளை அடையத் தடையாய் அமை கின்றன. 456

இடம், பொருள், சூழ்நிலை அனைத்திலும் முழுமையாய் நிறைந்து விளங்குபவர் பரமாத்மா. உலகம் உண்மை என்ற கருத்தே பரமாத்மா வெகு தொலைவில் உள்ளது போன்ற உணர்வை மனிதனுக்களிக்கிறது. 457

எந்த ஒரு சூழ்நிலையும் பரமாத்மாவை அடைவதில் பாதகமாகவுமில்லை; ஸாதகமாகவுமில்லை. ஏனெனில் பரமாத்மா சூழ்நிலைகளனைத்துக்கும் அப்பாற்பட்டவர். 458

பரமாத்மா தொலைவில் இல்லை. அவரைப் பெறுவதற்கான ஈடுபாட்டில் தான் குறைபாடு. 459

''உலகம் உள்ளது; கண்கூடாகக் காணப்படுகிறது; அது எனது'' என்று கருதுவதால், ''பரமாத்மா உள்ளார்; தற்போதும் உள்ளார்; அவர் என்னைச் சேர்ந்தவர்'' என்பதன் அனுபவம் தோன்றுவதில்லை. 460

ஸாதகன் ''பரமாத்மா இருக்கிறார்'' என்பதை ஏற்றுக் கொள்கிறான். ஆனால் ''உலகம் என்பது கிடையாது'' என்பதையோ ஏற்க மறுக்கிறான். இதனால் பரமாத்ம ப்ராப்தியில் தடையேற்பட்டுக் கொண்டிருக்கிறது. 461

ஏதோ ஒரு மார்கத்தில் வறட்டுப் பிடிவாதம் கொள்வதாலும், ஏனைய மார்கங்களை விரோதிப்பதாலும் பரிபூர்ண ப்ராப்திக்குத் தடை விளைகின்றது. 462

நமது உள்ளத்தில் பரமாத்மாவைத் தவிர வேறொன்றுக்கும் மதிப்பு இருக்குமானால், அதுவே அவரையடைவதற்குத் தடையாகிவிடும். 463

பகவானிடம் கொள்ளும் திட விசுவாஸம் அவரினும் உயர்ந்தது. ஏனெனில் எங்கும், எதிலும், எக்காலத்தும் விளங்குகின்ற பகவான் விசுவாஸத்தினால்தானே வெளிப்பட நேர்கிறது ? 464

பரமாத்மதத்வம் என்பது உணர்வு வடிவானது. (அனுபவஸ்வரூபம்). நமது பார்வை தான் அதன் பக்கம் இல்லை. 465

''ஏதோவொன்றைச் செய்து, தத்வத்தை அறிவோம்'' இது உடலின் மீதான பற்றை வலுவடையச் செய்கிறது. செயலினால் கிடைக்கும் பொருள், நிலையற்றதாகவே இருக்கும். 466

உலகைத் துறப்பதில் ''விவேகம்'' துணை புரிகிறது; பகவானைப் பெறுவதில் ''விஸ்வாஸம்'' துணை புரிகிறது. 467

உண்மையில் பகவானும் விளங்குகிறார்; குருவும் இருக்கிறார்; தத்வஞானமும் இருக்கிறது. நம்மில் தகுதியும், திறமையும் வேண்டிய அளவு உள்ளது. அழிந்து படும் சுகத்தில் நம்மிடம் உள்ள பேராசைதான் அவற்றை வெளிப்பட வொட்டாமல் தடை செய்கிறது. 468

உடல் மூலம் உலகியல் வேலைகளோ, தொண்டோ செய்ய முடியும். பரமாத்மாவை அடைவது முடியாது. உடலிடமிருந்து விலகி நிற்பதால் பரமாத்மப்ராப்தி தானே ஏற்பட்டு விடும்; தன்னையும் (ஸ்வயம்) அறிய முடியும். 469

## பகவானிடம் பராமுகம்

பகவானிடம் விமுகமாகிவிடும் மனிதன் செயல்பாடுகளிலும், அறிவதிலும், பெறுவதிலும் குறைவை உணர்கிறான். 470

பரமாத்ம தத்வத்தில் விமுகமாவதால்தான் எந்த ஒரு போகத்தையும் அனுபவிக்க முடிகிறது. அவ்வாறு பற்றுடன் போகங்களை நுகர்வதால் மேலும் மனிதன் பரமாத்மாவிடமிருந்து விமுகமாகிறான். 471

பகவானிடமிருந்து முகம் திருப்பிக் கொள்வதாலேயே ஜீவன் அநாதையாகி விடுகிறான். 472

உலகைப் புரிந்து கொள்ளாதவனே உலகியலில் ஆழ்ந்து விடுகிறான்; பரமாத்மாவைப் புரிந்து கொள்ளாதவனே அவரிடம் இருந்து பராமுகமாகி விடுகிறான். 473

உலகிடமிருந்து ஏதோ ஒன்றைப் பெற விரும்பும்போதே, நாம் பகவானுக்கு விமுகமாகி விடுகிறோம். 474

## பகவானுடன் ஸம்பந்தம்

மனிதன் எந்த அளவு உலகியலில் பொருள், நபர் முதலியவற்றுடன் தொடர்பு கொள்கிறானோ அந்த அளவு அவற்றுக்குப் பராதீனமாகி விடுகிறான். ஆனால் அவன் பகவான் ஒருவருடன் மட்டுமேயான ஸம்பந்தத்தை ஏற்றுக் கொண்டால் அவனுக்கு எப்போதுமே சுதந்திரம்தான். 475

ஸாதகன் தான் பகவானைச் சேர்ந்தவன் என்ற எண்ணத்துடன் உலகியல் செயல்பாடுகளில் ஈடுபட்டால் உலகியல் செயல்களும் சீர்மை பெறும்; இறைபணியும் சீர்மை பெறும். ஆனால் தன்னை உலகுடன் தொடர்புறுத்திக் கொண்டு செயல்பட்டால் உலகியல் செயல்களும் சீர் பெறா. இறை வழிபாடோ நடைபெறவே செய்யாது. 476

''ப்ரபு நம்மைச் சேர்ந்தவர். ஆனால் நமக்கானவரல்லர். நாம் அவருக்கானவர்''. இச்சீரிய மனோபாவத்தின் உட்பொருள் ''அவரிடமிருந்து எதையும் எதிர்பாரோம். நம்மையே அவருக்குக் கொடுப்போம். எத்தகைய மோசமான சூழ்நிலை வந்துற்றாலும் அவரனுப்பிய ப்ரஸாதம் என்றே அதனை ஏற்போம்'' என்பதே. 477

நல்லமுறையில் பயன்படுத்தவே பொருட்களை நமதாகக் கருத வேண்டும். நம்மை அர்ப்பணிப்பதற்காகவே பகவானை நம்முடையவராகக் கருத வேண்டும். ஆகவே கிடைக்கும் பொருட்களை உலகின் பயன்பாட்டிற்காகவும், நம்மை பகவானுக்கும் தந்து விட வேண்டும். 478

கணவன் மாண்டு போகலாம்; தன்னைக் கைவிடலாம். ஆனால் புகுந்தவீடு செல்லும் பெண் இவைபற்றிக் கவலை

கொள்வதில்லை. ஆனால் பகவானோ ஒருகாலும் மரணமடைவதுமில்லை; நம்மைக் கைவிடுவதுமில்லை. பின்பு, பகவானுடன் தொடர்பு கொள்வதில் எதைப் பற்றிய சிந்தனை? பகவானுக்குப் பிடித்துக் கொள்ள மட்டுமே தெரியும்; கைவிடத் தெரியாது. 479

''நான் பகவானுடையவன்; பகவான் என்னைச் சேர்ந்தவர்'' என்ற அநந்ய பாவனைக்கீடான திறமையோ, அவரைப் பெறும் தகுதியோ, வேறு எதுவுமில்லை. 480

பக்தன் தனது இயல்பு, தகுதி இவை பற்றிக் கவலைப்படாமல், பகவானுடனான தனது இடையறாத உறவின் பால் கண் செலுத்த வேண்டும். 481

பகவானிடம் தான் கொள்ளும் அனன்ய பாவனையே மிக உயர்ந்த, மிக எளிய ஸாதனை. 482

''பகவான் தவிர்ந்த வேறெதுவும் எனதன்று''- இது தான் தூய பக்தி. 483

எல்லாம் வல்ல எம்பெருமானுக்கு, நம்மிடமிருந்து விலகி இருக்கும் வல்லமை மட்டும் கிடையாது. 484

பகவான் மட்டுமே நம்முடையவர்; கிடைத்திருக்கும் பொருட்களனைத்துமே நமதன்று, பகவானுடையவை. 485

மனிதன் பொருட்களையும், செயல்களையும் தனதென்று கருதினால் எப்போதும் எல்லா வகையிலும் அடிமைப் படுவான். பகவானிடம் சரண் புகுந்து, அவர் தன்னுடையவர் எனக் கருதினால், எப்பொழுதும் எல்லா வகையிலும் சுதந்திரனாகிறான். 486

பகவானுடனான நமது ஸம்பந்தம் வெகு இயல்பானது. வலிமை, தகுதி, மற்றொன்றின் துணை இவையொன்றும் இத் தொடர்புக்கு அவசியமில்லை. 487

உலகின் ஸம்பந்தம் கிடைத்தற்கெளியது, மிக நெருங்கியது என்று ஒப்புக் கொள்வதைப் போலவே பரமாத்ம ஸம்பந்தத்தையும் ஒப்புக் கொள்வோம். பரமாத்ம ஸம்பந்தம் எட்டாதது, கிடைத்தற்கரியது எனப் பொதுவாக நாம் கருதுவது போலவே உலகின் தொடர்பையும் உதறித் தள்ளுவோம்.
488

''நான் பகவானைச் சேர்ந்தவன்'' என்பதை ஒப்புக் கொண்டு விடு. ''நான் உலகைச் சேர்ந்தவன்'' என்ற எண்ணத்தால் உலகியல் செயல்களும் நிறைவேறா; பகவானை வழிபடும்போது, அவரையும் மறந்து விடுவாய். 489

நீ எத்தகையவனாயினும் சரி; ''நான் பகவானைச் சேர்ந்தவன்'' என்பதை இக்கணமே ஒப்புக் கொண்டு விடு. 490

பகவானை த்யானம் செய்வதைக் காட்டிலும், அவரை வேறானவராகக் கருதாமல், தன்னவராக எண்ணுவது (அநந்ய பக்தி) மிக உயர்ந்தது. அநந்ய பக்தியால் த்யானம் தானே கை கூடுகிறது. அநந்ய பக்தி என்ற ஸாதனை மிகவும் உயர்வானது.
491

பகவான் அநந்ய பக்தியைக் காட்டிலும் துறவு, தவம் இவற்றை அதிகம் விரும்புவதில்லை.
492

உலகிற்குப் புறங்காட்டுவதே, பகவானை அணுகுவதற்கான சிறந்த வழி.
493

பகவானிடம் கொள்ளும் திடமான அநந்ய பக்தி, மாசுகளனைத்தையும் அழித்து விடுகிறது. 494

பகவானுடன் ஸம்பந்தம் ஏற்படும்வரை எல்லாமே உலகாயதம் தான். ஸம்பந்தம் நேர்ந்தபின் எல்லாமே தெய்வத் தன்மை பெறுகின்றன.
495

பகவானிடமிருந்து ஏதேனும் எதிர்பார்த்தால் நாம் அந்த வஸ்துவுடன் தொடர்பு கொண்டு விடுகிறோம்; பகவானுடன் அன்று. 496

எது தனதோ, அது தன்னில் எப்போதுமே விளங்குகிறது. அதை ஏற்றுக் கொண்டு விட வேண்டும், அவ்வளவே. எது தனதன்றோ, அது தன்னிடமிருந்து விலகிச் சென்ற வண்ணம் இருக்கும். அதைக் கைவிட வேண்டும். 497

மனிதன் என்ற ஒரு தகுதி படைத்திருப்பதால் மட்டுமே ஒருவனுக்கு பகவானுடன் நேரடியான உறவு உண்டு. அதற்குத் தரகோ, ஊடகமோ தேவையில்லை. 498

## மனம்

மனத்தை பகவானிடம் ஈடுபடுத்துவதைக் காட்டிலும் தன்னை அவரிடம் ஈடுபடுத்துவதே சிறந்தது; தான் ஈடுபட்டு விட்டால் மனம் தானே பகவானிடம் ஒன்றிவிடும். 499

மனத்தை முழுவதும் ஒருமுனைப்படுத்துவது யோக மார்கத்தில்தான் அவசியம். பக்தியில் பகவானுடனான தொடர்பு உறுதி பெறுவதுதான் அவசியமானது. 500

அமைதி, துறப்பதால் கிடைக்கும்; மனத்தை ஒருமுனைப்படுத்துவதால் அன்று. 501

மனத்தை நிலைநிறுத்துவது உயர்ந்த செயல் அன்று. மாறாகத் தன் ஸவரூபத்தின் என்றும் உள்ள (ஸ்வத:ஸித்த), வேறு எதையும் சார்ந்திராத உறுதியான நிலையை அனுபவத்தில் உணர்வதே சிறப்பு மிக்க செயல். 502

மனத்தின்கண் உள்ள உலகியல் பற்றை நீக்குவதே முக்கியமான தேவை; மனத்தின் அலைபாயும் தன்மையை நீக்குவது அத்தனை அவசியமில்லை. 503

மனத்தை உலகியலின்பாலிருந்து திசைதிருப்பி பரமாத்மாவிடம் ஈடுபடுத்தும் முயற்சி நடைபெறும்வரை மனத்தை முழுமையாகக் கட்டுப்படுத்த இயலாது; மனம் பரமாத்மா தவிர்ந்த மற்றொன்றின் இருப்பையே ஏற்காதபோதுதான் அது கட்டுப்படும். 504

நிஷ்காம பாவத்தால் புத்தி நிலைபெறுகிறது; அப்யாஸத்தால் மனம் நிலைபெறுகிறது. புத்தி நிலைபெறுவதால் உய்வு பெறலாம்; மனம் நிலைநிற்பதாலன்று. மனம் நிலைபெற்றால் ஸித்திகள் தான் கிடைக்கும். 505

மனம் பரமாத்மாவுடன் ஒன்றுவதில்லை; ஆனால் ப்ரக்ருதி (உலகம்)யுடன்தான் ஒன்றுகிறது. ஆகவே மனம் பரமாத்மாவுடன் லயம் பெறலாம்; ஆனால் ஒருமையுடன் ஈடுபடுவது கடினம். 506

## மனிதன்

ஸுகம் அனுபவிக்க ஸ்வர்கம்; துக்கம் அனுபவிக்க நரகம். இரண்டிலும் உயர்ந்து நின்று உய்வுபெறவே மனித சரீரம். 507

எல்லாப் பிறவிகளுக்கும் முதலான பிறவியும் மனிதப்பிறவிதான்; கடைசிப் பிறவியும் அதுதான். பரமாத்மாவைப் பெற்றுவிட்டால் இதுவே கடைசிப் பிறவியாகிறது. பரமாத்மாவைப் பெறாவிட்டால் முடிவற்ற பல பிறவிகளுக்கு முதல் காரணமாகவும் அது அமைந்துவிடுகிறது. 508

உய்வுபெறுவது அதாவது பரமாத்ம தத்வத்தை அடைவது என்பது மனிதப்பிறவிக்கேயான 'ஸ்வதர்மம்'. ஏனெனில், மனித உடல் பரமாத்மப்ராப்திக்காகவே கிடைத்துள்ளது. 509

உடலுடன் தனது தொடர்பைக் கருத்தில் கொண்டு இன்பநுகர்விலும், பொருள் சேர்ப்பதிலும் இழிதல் மனிதப்பிறவிக்கேயான 'பரதர்மம்' (கூடா அறம்) 510

உடலமைப்பால் மட்டுமே ஒருவன் மனிதனாக மாட்டான்; தனது விவேகத்துக்குப் பெருமை தருபவனே மனிதன். 511

மனிதத் தன்மையற்றவன் விலங்கினும் தாழ்ந்தவன். காரணம் விலங்குகள் முன்வினைப் பயன்களை அனுபவித்து மனிதப் பிறவி பெற ஆயத்தம் செய்து கொண்டிருக்கின்றன. ஆனால் மனிதனோ புதிய தீவினைகள் புரிந்துகொண்டு விலங்குத் தன்மை பெற ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறான். 512

மிக உயர்ந்த ஜீவன்முக்தநிலை மனிதப்பிறவிக்கு மட்டுமே இயல்பாக அமைகிறது. 513

உலகிற்குத் தொண்டு புரிவதே மனித உடலின் நல்ல பயன்பாடு. 514

பகவானைச் சிந்திப்பது, அவருக்குத் தொண்டாற்றுவது இவ் விரண்டினாலேயே மனிதத் தன்மை கிட்டிவிடுகிறது. 515

மனிதப்பிறவி கிடைத்துவிட்டது; ஆனால் பரமாத்மாவைப் பெறவில்லை. இது மிகவும் வருத்தத்துக்குரிய விஷயம். 516

மனிதப்பிறவி கேட்பதற்கும், கற்பதற்கும் மட்டுமானதன்று; தத்வத்தை உணர்வதற்கானது. விலங்குகளும், பறவைகளும் கூடக் கற்றுக் கொள்ளும் திறமை வாய்ந்தவைதான். சர்கஸில் அவற்றின் நேர்த்தியான திறமைகளைக் காணலாம். 517

பிறர்க்குப் பணிபுரியாதவனும், பகவானை நினையாதவனும் மனிதனென்று சொல்வதற்கே தகுதியற்றவன். 518

**சுகபோகங்களின் ஆரம்பத்தை எதிர்நோக்குவது விலங்குத்தன்மை. அவற்றின் விளைவைப் பார்ப்பதுதான் மனிதத்தன்மை.** 519

மனித வாழ்க்கை பிறர்க்கேயானது; தனக்காகவன்று; படைப்பின் நியதியே இதுதான். 520

பரமாத்மப்ராப்திக்காகவன்றி மனித சரீரம் வேறெதற்காகவும் பயன்படத் தக்கதன்று. 521

பகவத் விஷயத்தின் ருசி பெற்றவனே பெரும்பேறுபெற்றவன்; உயர்ந்தவன்; மனிதன் என்றழைக்கத் தகுதி வாய்ந்தவன். 522

மனிதப் பிறவியைப் பயன்பெறச் செய்வதற்கு ஒவ்வொரு கணமும் கவனத்துடன் இருக்கும் பெரும் பொறுப்பு உண்டு. 523

மனிதப்பிறவியின் பெருமை பெறுவது விவேகத்தினால். செயல்களின் அடிப்படையிலன்று. 524

மனித உடல் கர்மயோனியன்று; ஸாதனயோனி. உய்வுக்கான ஸாதனை புரியாதவன் அமரனாகலாம், அரக்கனாகலாம், மனிதனாக மாட்டான். 525

''பரமாத்மப்ராப்தி எனது பிறப்புரிமை'' என உணர்ந்தவன்தான் 'மனிதன்' என அழைக்கத்தக்கவன். 526

## ''எனது'' என்ற எண்ணம்

மனிதனுக்கு மனைவி, மக்களிடம் தனது என்று பற்றுள்ளவரை, அவன் மூலம் அவர்கள் சீர்மை பெறுவது முடியாததாகிறது. ஏனெனில் தனது என்ற மமதையே மூலமான அசுத்தி(மாசு) ஆகும். 527

உலகு சார்ந்த பொருட்களில் மனிதனுக்கு எவ்வளவு 'எனது' என்ற எண்ணம் உள்ளதோ அத்தனை 'அஸத்' தொடர்பு ஏற்படுகிறது; எத்தனை அஸத் ஸங்கமோ அத்தனை வீழ்ச்சி. 528

எவ்வெப் பொருட்களைத் 'தனது' எனக் கருதுகிறோமோ, அவ்வப் பொருட்களுக்கு எல்லாம் நாம் அடிமையாகிறோம். அடிமைக்குக் கனவிலும் சுகம் இல்லை. 529

உலகு என்பதே பரமாத்மாவுடையதுதான். ஆனால் ஜீவன் தவறாக பரமாத்மாவின் உடைமையைத் தனதாக எண்ணி விடுகிறான். அதனாலேயே கட்டுண்டு விடுகிறான். 530

உடல், புலன்கள் இவை ஒருபோதும் 'நாங்கள் உனது உடைமை' என்று கூறுவதில்லை. நாம்தான் அவற்றை நமதாக எண்ணிக் கொள்கிறோம். அப்படி எண்ணுவதுதான் மாசு ஆகின்றது. 531

நாம் வீட்டில் வாழ்வதால் கட்டுப்படுவதில்லை. வீட்டை நமதாகக் கருதுவதாலேயே கட்டுண்கிறோம். 532

மனிதன் உலகில் எத்தனை பொருட்களைத் தனது என்றும், தனக்கானது என்றும் கருதுகிறோனோ அத்தனை பந்தப் படுகிறான். 533

பொருட்களைத் தனதென்று எண்ணுவதால் அடிமைப் படுகிறான். பரமாத்மாவைத் தனதென்று கருதுவதால் சுதந்திரனாகிறான். 534

உடலைத் 'தனது' என்றும், 'தனக்கானது' என்றும் கருதுவது பெருந்தவறு. இதை ஒழித்தால் உய்வு பெறுவதில் எவ்விதத் தடையும் இல்லை. 535

உலகின் பொருட்கள் எப்போதும் நம்முடன் இரா. நாமும் அவற்றுடன் எப்போதும் இருப்பதும் ஸாத்யமில்லை. அவற்றில் உரிமை கொண்டாடுவதால் அவலம்தான் மிஞ்சும். உலகின்கண் உரிமையை ஒழித்து, அதற்குப் பணி செய்வோம். 536

கிடைத்துள்ள பொருட்களைத் தனதென்று கருதுபவன் உலகுக்கும் பயன்படான்; தனக்கும் பயன்படான்; பகவானுக்கும் பயன்படமாட்டான். 537

'எனது' என்ற மமதையற்றவன் உலகுக்கு நன்மை செய்யு மளவு, மமதையுள்ளவன் நன்மை செய்ய இயலாது. 538

எப்பொருளையும் தனதென்று கருதக்கூடாது. தனக்கானது என்றும் கருதக்கூடாது. அதில் பற்று வைக்கவும் கூடாது. தனதென்று கருதுவதால் மாசடைகிறோம். பற்றால் அமைதியை இழக்கிறோம். 539

உலகம் ஒவ்வொரு கணமும் சென்று கொண்டிருக்கிறது. போய்ச் சேரும் பொருளில் உரிமை கொண்டாடினால் அழ நேரிடும். என்றுமுள்ள பகவானுடன் ஆத்மீயதை (ஒன்றி நிற்றல்) கொண்டால் நினைத்ததெல்லாம் நிறைவேறி யவனாவாய். 540

'நமது' என்று சொல்லத்தக்க எந்த ஒருபொருளும் நம்முடன் எப்போதும் இருக்க முடியாது. இந்நிலையில் மமதையைத் துறப்பதில் என்ன தயக்கம்! 541

உடலைத் தனதென்று கருதுவது துன்பம் பெறுவதற்காக. பிரபஞ்சம் முழுவதையும் தனதென்று கருதுவது உய்வு பெறுவதற்காக. 542

தன்னிலும் வேறான பொருள் ஒருகாலும் தனதாகாது. உண்மையில் நம்மிடம் இருந்து வேறான பொருள்தான் தனித்து நிற்க முடியும். 543

உடலைத் தனதென்று கருதுவது அஸத் ஸங்கம். அவ்வாறு எண்ணாதிருப்பதே ஸத்ஸங்கம். 544

உடலைத் தனதென்று கருதினால் உடலிலுள்ள பொருட்களும் தனதாகத் தென்படும். உடலை அடையும் பொருட்கள் தன்னையே சேர்வதாகத் தென்படும். 545

## மரணமும், அமரத்தன்மையும்

சரீரம் - ஸம்ஸாரம் (உலகம்) இவற்றுடனான தொடர்பில் மரணத்தையும், பகவானின் தொடர்பால் மரணமிலாப் பெருவாழ்வையும் அனுபவிக்கலாம். 546

தனக்காகச் செயலாற்றுவதால் முதலில் செயலுடனான தொடர்பும், பின்னர் பயனுடனான தொடர்பும் ஏற்படுகின்றன. இவை இரண்டும் தோன்றி, நஷ்டமாகின்றவை. இவற்றால் அந்தக்கரணத்தில் ஏற்படும் பற்றோ நாம் திரும்பத் திரும்பப் பிறந்து, மரிக்கக் காரணமாகிவிடுகிறது. 547

உடலை 'நான்' என்றும், 'எனது' என்றும் கருதுவது அசட்டுத்தனம். இது தான் மரணம். 548

எந்த ஒரு செயலும் நிறைவேறுவதும், நிறைவேறா ததும் நிச்சயமில்லை. ஆனால் மரணம் என்பதோ ஸர்வநிச்சயம். 549

உடலுக்கு மரணம் என்பது எளிதாயமைவது போல், ஸ்வயமான நமக்கு அமரத்தன்மையும் எளிது. 550

## யோகமும் போகமும்

இன்பம் தரும் சூழ்நிலையில் இன்புறுபவனும், துயர் தரும் சூழ்நிலையில் துன்புறுபவனும் போகி, யோகி அல்லன். யோகிக்கு இன்பமும் துன்பமும் ஒன்றே. 551

போகி ரோகி(நோயாளி)யாகிறான்; துன்புறுகிறான்; தீக்கதிக்குச் செல்கிறான். 552

சுகம் கிடைத்தால் இன்புறுபவன் யோகியாக முடியாது. 553

போகி யோகியாக முடியாது. ஆனால் ரோகியாக முடியும். "போகே ரோக பயம்" 554

போகம் என்பது நுகர்பவன், பொருள் ஆகிய இரண்டின் இணைப்பால் விளைவது; யோகமோ (பரமாத்மாவின் நித்ய ஸம்பந்தம்) தனித்து, தானே விளைவது. போகம் இருக்கும்வரை யோகத்தின் அனுபவம் கிடைக்காது. போகத்தை முற்றிலும் துறந்தால்தான் யோகத்தின் அனுபவம் பிறக்கும். யோக அனுபவம் பெற்றுவிட்டால் போக இச்சை வேரோடு அழிந்து விடும். 555

பரமாத்மாவின் ஸங்கத்தால் யோகம். உலகின் தொடர்பால் விளைவது போகம். 556

தனிமையில் சுகம் தேடுவதும், மனம் ஒடுங்குவதில் சுகம் தேடுவதும் போகம்தான், யோகம் அன்று. 557

உலகுடன் தொடர்பு கொள்வதன் பெயர் போகம்; தொடர்பறுப்பதன் பெயர் யோகம். 558

எந்த ஒரு சூழ்நிலையோடும் ஒத்துப் போவது போகம். போகத்தால் தனித்தன்மை அழிவதில்லை. ஆகவே ஸாதகன் எந்த ஒரு சூழ்நிலையோடும் ஒன்றக்கூடாது. 559

உலகின் தொடர்பு நீங்குவதும் தானே ஸித்திக்கும். பரமாத்மாவின் சேர்க்கையும் தானே ஸித்திக்கும். 560

தானே நீங்கிச் செல்லும் பொருட்களின் சேர்க்கையை விரும்புவதைத் துறக்க வேண்டும். இதன் பெயர் தான் “யோகம்” 561

ஒரு சிலசமயம் யோகியாகவும், சில நேரம் போகியாகவும் இருப்பவன் உண்மையில் போகிதான். 562

யோகி மற்றவர்க்கு இன்பம் தருகிறான். போகி மற்றவர்க்குத் துன்பம் தருகிறான். 563

‘எனக்குக் கிடைக்கட்டும்’ - இது போகம். ‘பிறருக்குக் கிடைக்கட்டும்’ - இது யோகம். 564

தனது சுகபோகங்களில் கவனம் கொள்பவன் போகியாகிறான்; யோகியாவதில்லை. 565

எல்லோருக்குமானது, எப்போதுமானது எதுவோ அதை யடைவது ''யோகம்'', எல்லோருக்குமற்றது, எப்போதுமற்றது எதுவோ அதையடைவது ''போகம்.'' 566

பகவானைத் தன்னுடையவராகக் கருதுவது யோகம்; அவரிடமிருந்து எதையேனும் விரும்புவது போகம். 567

(உலகியல் பொருட்களின்) பிரிவால் நிகழ்வது யோகம்; அவற்றின் சேர்க்கையின் விளைவு போகம். 568

போகத்தால் ஒருவன் பலரிடமும் கடன்படுகிறான். யோகி யாருக்கும் கடன்படுவதில்லை. 569

## விருப்பும், வெறுப்பும்

விருப்பும், வெறுப்பும் அந்தக்கரணத்தில் தோன்றி மறையும் விகாரங்கள். அந்தக்கரணத்தின் இயல்பல்ல. இயல்பு நிலை யானது. விகாரம் நிலையற்றது; அதாவது தோன்றி, மறைவது. விருப்பும்-வெறுப்பும் அந்தக்கரணத்தில் வந்து போகின்றவை. ஆகவே அவற்றை அழிக்க இயலும். 570

ஸாதகனின் ப்ரவ்ருத்தியும், நிவ்ருத்தியும்* சொந்த விருப்பு - வெறுப்புகளைச் சார்ந்து அமையக்கூடாது. சாஸ்த்ரங்களைச் சார்ந்து அமைய வேண்டும். 571

விருப்பு-வெறுப்பின் அடிப்படையில் செய்யப்படும் செயல்களின் விளைவுகள் சீராக அமைவதில்லை. 572

மற்றொரு ஸாதகனிடம் கொள்ளும் வெறுப்பு தனது ஸாதனை நிறைவு பெறுவதில் பெருந்தடையை ஏற்படுத்தும். 573

★ உலகியல் செயல்பாடுகளும், ஆன்மிக ஸாதனையும்

விவேகம் அநாதி. பற்று நம்மால் விளைவது. உலகின்பாலேற்படும் விருப்பத்தால் விவேகம் பின்தள்ளப்படுகிறது. விவேகம் விழிப்புற்றால் பற்று அழிகிறது. 574

இடையறாத மாற்றத்தையே இயல்பாகக் கொண்ட உலகை நிலையானது எனக் கருதுவதால் விருப்பு, வெறுப்பாகிய இரட்டை தோன்றுகிறது. 575

எதில் விருப்பம் ஏற்படுகிறதோ அதன் குறைபாடு தெரிய வராது; எதில் வெறுப்போ அதன் நல்லியல்பு தெரியவராது. விருப்பும், வெறுப்பும் நீங்கினால் பொருட்களின் உண்மைத் தன்மை புலப்படும். 576

உண்மையில் அனைத்துமே சின்மயமானவை. விருப்பு-வெறுப்புகளின் காரணத்தால் ஜடமாகக் காணப்படுகின்றன. விருப்பு-வெறுப்பு முழுமையாக நீங்கினால் ஒரே ஒரு சின்மயதத்வம் (பரமாத்மா) தவிர வேறு ஒன்றுமே கிடையாது. 577

## தருவதும், பெறுவதும்

ஸுகம் பெறுவதால் அந்தக்கரணம் மாசடைகிறது. ஸுகம் தருவதால் அந்தக்கரணம் தூய்மை பெறுகிறது. 578

ஸம்ஸாரக் கடலில் பெற விழைபவன் மூழ்கி விடுகிறான். கொடுக்க விரும்புபவன் கரை சேர்கிறான். 579

கொடுக்கும் மனப்பான்மையால் சமுதாயத்தில் ஒருமைப்பாடும், அன்பும் ஏற்படுகின்றன; எடுத்துக் கொள்ளும் மனப்பான்மையால் சமுதாயத்தில் போராட்டம் ஏற்படுகிறது. 580

கொடுக்கும் மனப்பான்மை உய்வு தருகிறது. எடுத்துக் கொள்ளும் மனப்பான்மை வீழ்ச்சி தருகிறது. 581

உடலின்கண் 'நான்', 'எனது', 'எனக்காக' என்ற எண்ணங்கள், எடுத்துக் கொள்ளும் மனப்பான்மையை வளர்க்கின்றன. 582

பிறரது தொடர்பு பணிபுரிவதற்கென்றே அமைய வேண்டும். எதிர்பார்ப்புகளுடன் ஏற்படுத்திக் கொள்ளும் தொடர்பு துயரை விளைவிக்கும். 583

ஏதாவது பெற்றுக் கொண்டு கொடையளிப்பதைக் காட்டிலும் எதையும் பெறாதிருப்பதே சிறந்தது. 584

ஏதாவது பெற்றுக் கொண்டு, அளிப்பதினும் பெறாதிருப்பதே மிகுந்த புண்ணியச் செயல். இதை அறிந்தவர் மிகவும் குறைவு. 585

உலகிடமிருந்து சிறிதளவேனும் பெறுவது பாவம்; தருவது புண்ணியம். 586

சுகம் பெறுவது நோக்கமானால் உடலும் நமதன்று; சுகம் தருவது (தொண்டு) நோக்கமானால் உலகம் முழுவதுமே நமதாகும். 587

பெறுகின்ற விருப்பத்தால் மனிதன் வேலைக்காரனாகிறான். தரும் விருப்பம் இருந்தாலேயே மனிதன் முதலாளியாகி விடுகிறான். 588

பெறும் விருப்பத்தால் போகமும், தரும் விருப்பத்தால் யோகமும் ஏற்படுகின்றன. 589

உடலின் தேவைக்கிணங்க அதற்கு உணவும், நீரும், உடையும் கொடுக்கத்தான் வேண்டும். அதற்காக அதனுடன் தொடர்பை வலுப்படுத்திக் கொண்டு தேவைகளைப் பெறுபவனாகவே இருந்து விடக்கூடாது. பெறுவது பந்தம்; தருவதோ மோக்ஷம். 590

# மெய்யடியார்கள்

மெய்யடியார்களின் உபதேச மொழிகளைப் பின்பற்றித் தனது வாழ்க்கையை அமைத்துக் கொள்வதே அவர்களுக்குச் செய்யும் தொண்டாக அமையும். 591

ஆதவன் ஒரே சீராக அனைவருக்குமே ஒளி தருவது போன்றே, அடியார்களும் அனைவருக்கும் ஒரே விதமாகவே நலம் புரிகின்றனர். 592

வெளியில் ஒளி தருவது ஆதவன்; உள்ளொளி பிறக்கக் காரணம் அடியார்கள். 593

மெய்யடியார்களுக்கு ஆற்றும் பெரும் தொண்டு அவர்தம் கோட்பாடுகளைக் கடைப்பிடிப்பதே. ஏனெனில் அவர்களுடைய கோட்பாடுகளே அவர்களுக்கு உயிரினும் இனியவை. 594

அடியார்களோ, ஆண்டவனோ, அறமோ, அறநூல்களோ யாரையும் அசட்டை செய்வதில்லை; ஜீவனே இவற்றை அசட்டை செய்து, முகத்தைத் திருப்பிக் கொள்கிறான். 595

மணலைக் கயிறாகத் திரிக்க முடியுமா? ஆனால் மெய்யடியார்களோவெனில் உலகில் நிறைந்துள்ள நூல்கள் அனைத்திலுமிருந்து கீதை தத்வத்தைத் திரட்டி எளிதாக உபதேசித்து விடுகின்றனரே! என்னே அவர்தம் பெருங்கருணை! 596

பகவானிடமிருந்து நன்மைகள் அளிப்பவை ஐந்து. 1. நாமஜபம், 2. த்யானம், 3. தொண்டு, 4. கட்டளைக்குக் கீழ்ப்படிதல், 5. ஸத்ஸங்கம். அடியார்கள் விஷயத்தில் நன்மை தரவல்லவை மூன்று. 1. தொண்டு, 2. ஆணைக்குக் கீழ்ப்படிதல், 3. ஸத்ஸங்கம். 597

பணம் படைத்தோர் மற்றவரையும் வேலைக்காரராக்குவர்; அடியார்களோ ஏனையோரையும் அடியார்களாகத் திருத்திப் பணிகொள்வர். 598

அறநூல்கள், நல்ல ஆராய்ச்சி, பகவான், அடியார் - நான்கும் ஸாதகனை எவ்வகையிலும் நிராசையடையச் செய்வதில்லை. அவனுக்கு மேன்மையே தருகின்றனர். 599

பற்றற்ற அடியார்கள் மூலமே ஸமுதாயம் பெறுமளவில் சீர் பெறுகிறது. 600

அடியார்களும், ஞானிகளும் மக்களைத் தம்பால் ஈர்ப்பதற்காக உலகில் அவதரிப்பதில்லை; அவர்களை இறையடியா ராக்குவதே அடியார்களின் நோக்கம். மக்களைத் தன்பால், தான் செய்யும் த்யானம், பூஜை முதலியவற்றால் ஈர்ப்பவன் பகவானுக்கு விரோதி. அவன் மக்களை நரகத்துக்கு இட்டுச் செல்கிறான். 601

## உலகம்

உலகின் தொடர்போ (ஸம்யோகம்), பிரிதல் (வியோகம்) என்னும் தீயில் இடையறாது எரிந்து கொண்டுள்ளது. எதனுடன் ஸம்யோகம் (தொடர்பு) எற்படுமோ, அதன் வியோகமும் (பிரிவும்) நிச்சயமானது. அந்த தொடர்பை நிலையானது என்று எண்ணுவதுதான் நாம் செய்யும் தவறு. 602

உலகின் தொடர்பு அழிவது; தவிர்க்கவொண்ணாதது. பிரிவின் நிகழ்வும் அவ்வாறுதான். உலகில் பிரிவு ஒன்றே உண்மையானது. 603

அழியும் பொருட்களின் தொடர்பு ஒருபோதும் நமது துயரை நீக்காது. 604

தோன்றி மறையும் பொருட்களின் வசப்படாதிருப்பதும், அவற்றைச் சாராது இருப்பதும்தான் மனிதனின் உண்மையான வெற்றி. 605

உலகு, உடல் இவற்றைச் சார்ந்திருப்பது முற்றிலும் அழியாதவரையில் ஆசை, மரணபயம், செயல் வேட்கை, பெற்றுக் கொள்வதில் பேராசை இந்நான்கும் அழிவுறா. 606

மனிதன் தான் பற்றுக் கொண்டு உலகுடன் சேர்கிறான். உலகம் ஒருநாளும் அவனுடன் இணைவதில்லை. 607

உலகியலில் ஆழ்ந்திருக்கும்வரை உலகைப்பற்றிய அறிவு ஏற்படாது. பரமாத்மாவிடமிருந்து விலகி இருக்கும்வரை அவரைப் பற்றிய மெய்யறிவு தோன்றாது. இது நியதி. 608

உலகுடன் ஒன்றி இருப்பதும், பரமாத்மாவிடமிருந்து விலகி இருப்பதும் தவறாக ஏற்றுக் கொள்ளப்பட்ட விஷயம். 609

நிலையற்றவற்றுடன் கொள்ளும் தொடர்பால் அந்தக்கரணம், கர்மம், பொருட்கள் யாவுமே இழிநிலை எய்துகின்றன. அழியும் பொருளில் ஏற்கப்பட்ட தொடர்பு நீங்குவதால் அம்மூன்றும் தாமே தூய்மை பெறுகின்றன. 610

உலகுடனான தொடர்பை விடாதவரை போகம்தான்; யோகத்திற்கு இடமில்லை. உலகுடன் தொடர்பு மனத்திலிருந்து முற்றிலும் அழிந்த பின்னரே யோகம் ஸித்தி பெறும். அதாவது பரமாத்மாவுடன் தனது நித்ய ஸித்தமான நித்யயோகத்தை உணரமுடியும். 611

உலகுடன் தவறாக ஏற்றுக் கொண்டுவிட்ட தொடர்பை அறுத்தெறிய மூன்று உபாயங்கள் உள்ளன. 1. கிடைத்துள்ள உடல் முதலான ஸாமக்ரிகள் உலகைச் சார்ந்தவை என்றறிந்து, உலகின் தொண்டில் ஈடுபடுதல், 2. (உடல் முதலிய) ஜடப்பொருட்களின் தொடர்பறுத்து தன் ஸ்வரூபத்தில்

நிலைபெறுதல், 3. உடல் முதலானவற்றுடனேயே பகவானைச் சரண்புகுதல். முதலாவது கர்மயோகம், இரண்டாவது ஞானயோகம், மூன்றாவது பக்தியோகம். 612

தோன்றி அழியும் பொருட்களின் துணைகொண்டு அவற்றுடன் ஏற்படும் தொடர்பால் இன்பத்தை விழைபவன் ஒருநாளும் இன்பம் பெறமாட்டான். இது நியதி. 613

அழியும் பொருட்களுக்குச் செய்யும் அடிமைத்தனமே அழியாப் பரம்பொருள்பால் செல்ல விடாமல் தடுக்கின்றது. 614

உலகம் தரும் உபகரணங்கள் உலகிற்கானவை; அவை நமக்குப் பயன்படா. 615

உலகம் நம்பத்தக்கதன்று. தொண்டு செய்யத் தக்கது. 616

அழிவதில் உரிமை கொள்வது அமைதியின்மையையும், பந்தத்தையும் அளிக்கும். 617

உலகை 'அஸத்' எனத் தெரிந்து கொண்டாலும் அதன் கவர்ச்சி அழியாதவரையில் 'ஸத்' கிடைக்காது. (சினிமா பொய் என்றாலும் அதில் மயக்கம் இருக்கிறதே) 618

பகவானைச் சார்ந்திருப்பது உய்வுதருவதைப் போலவே, பணம் முதலிய அழியும் பொருட்களின் மீதான பற்று வீழ்ச்சியைத் தருகிறது. 619

உலகியல் சார்ந்த பொருட்களுக்கு மதிப்பளிப்பது தீயவிளைவுகளுக்கு அடிப்படைக் காரணம். 620

பகவானிடமே நம்பிக்கை கொள்ள வேண்டும். தோன்றி அழியும் பொருட்களின் மீதான நம்பிக்கை ஏமாற்றமே தரும்; துயர் விளைவிக்கும். 621

பகவானைப் பிரிவதும், உலகியலுடன் சேர்வதும் ஒருகாலும் நடக்காது. (ஏனெனில் அது இயல்புக்கு மாறானது.) 622

உலகுடன் எப்போதும் இருப்பதும், பரமாத்மாவைப் பிரிந்திருப்பதும் ஒருபோதும் இயலாத ஒன்று. 623

அஸத்தின் தொடர்பே குற்றங்குறைகளனைத்துக்கும் மூலம். ஸமத்வம் குலைவதற்கும் காரணம் அதுவே. 624

உடல், உலகு இவற்றின் இடையறாத மாற்றங்கள் 'உனது நித்ய ஸம்பந்தம் மாறுபாடற்ற பரமாத்ம தத்வத்துடன் தான்; நீ எங்களுடனும், நாங்கள் உன்னுடனும் . நிலைத்து இரோம்'' என்று செயலளவில் நமக்கு உபதேசம் செய்து வருகின்றன. 625

இன்று நம்முடன் எத்தனை பொருட்கள் உள்ளனவோ, நபர்கள் உள்ளனரோ அதன் உறவு எவ்வளவு தூரம் என்பதை ஒவ்வொருவரும் ஆராய்ந்தறிவது அவசியம். 626

உடலைப் பேணி வைத்துக் கொள்ள விரும்புகிறோம். சுகபோகம், ஓய்வு இவற்றை விரும்புகிறோம். மனவிருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள விரும்புகிறோம். இவை அனைத்தும் அஸத்தைச் சார்ந்திருப்பதாகும். 627

ஒரு சமயம் இருந்து மற்றொரு சமயம் இல்லாதிருப்பதும், ஓரிடத்தில் இருந்து பிறிதொரு இடத்தில் இல்லாதிருப்பதும், ஒருவரிடத்தில் இருந்து மற்றொருவரிடம் இல்லாதிருப் பதுமான ஒரு பொருளுக்கு உண்மையில் இருப்பு என்பதே கிடையாது. 628

பொருளும், நபரும் இருப்பதில்லை; அவற்றோடு இருப்பதாகக் கருதும் தொடர்போ செயற்கையானது. இத்தொடர்பே பிறப்பிறப்பிற்குக் காரணமானது. 629

உலகம் தன்போக்கில் சென்று கொண்டிருக்கிறது. நாம் தான் சென்று கொண்டிருப்பதைப் பற்றிக் கொண்டு, அது விடுபட்டதும் அழுது கொண்டிருக்கிறோம். 630

உலகை அசட்டை செய்பவனிடம், உலகம் பெருமதிப்புக் கொள்கிறது. உலகுக்கு மதிப்பளிப்பவனை அது சுவைத்துத் துப்பிவிடுகிறது. 631

மனிதன் உலகியல் பொருட்களுடன் தொடர்பு கொள்ளும்வரை, அவற்றின் தேவையை உணரும் வரை இன்பம் பெறமாட்டான். 632

(அழியும்) உலகுக்கு இருப்பைத் தருவதால் சேர்க்கையும் பிரிவும். அதற்குப் பெருமை தருவதால் இன்பமும், துன்பமும். 633

உலகின் இருப்பால் தடையேற்படாது. அதற்கு மதிப்பளிப்பதால் தடை விளைகிறது. அம்மதிப்பின் விளைவால் அடிமைத்தனம் நேர்கிறது. 634

உலகின் தொடர்பு அநித்யம்; பிரிவே நித்யம். நித்ய தத்வத்தை ஏற்பதே மனிதனின் கடமை. 635

உலகில் நாம் மதிப்பளிக்கும் பொருட்கள் நாம் பரமாத்ம ப்ராப்தியடைவதைத் தடை செய்வதோடு, தாமும் அழிந்துவிடுகின்றன. 636

உலகம் மெய்யோ, பொய்யோ; அதனுடன் நமது தொடர்பு பொய்யானதே. இதில் ஸந்தேஹமேயில்லை. 637

மருதோன்றிஇலை (மருதாணி) வெளிக்குப் பச்சையாகக் காணப்பட்டாலும் உள்ளே சிவந்திருப்பது போல் ப்ரபஞ்சம் வெளிப்பார்வைக்கு வேறுவிதமாகத் தோன்றினாலும், உள்ளிருப்பது பரமாத்ம ஸ்வரூபமே. 638

நாமோ உண்மையில் சேதனமாகவும், அழிவின்றியும் விளங்கு கிறோம். உலகின் பொருட்கள் ஜடம்; அழியும் இயல்புள்

ளவை. இரண்டுமே தனித்தனியான இனம், வேற்றினம் சார்ந்த அவை நம்முடன் சேர்வது எங்ஙனம்? 639

உதித்தெழுகின்ற ஞாயிறு இடையறாது மறைவை நோக்கியே செல்கிறது. உலகம் தோன்றிய நாள் முதல் அழிவை நோக்கியே பயணமாகிறது. 640

உலகம் முற்றிலும் வேறுபட்ட இனம். வேற்றினப் பொருளுடன் தொடர்பே ஏற்பட இயலாது (எண்ணெயும், நீரும்போல). அது போன்ற வெறும் தோற்றம்தான் ஏற்பட முடியும். இதுவே கெடுதல்களின் காரணம். அது ஒழிந்தால் முக்தி தானாகவே ஏற்பட்டு விடும். 641

உலகியல் சார்ந்த பொருட்கள், மரியாதை, கௌரவம், பெருமை, புகழ், ஓய்வு, ஆதரவு, பரிவு இவற்றின் எதிர்பார்ப்பு வீழ்ச்சிகளுக்குக் காரணம். 642

இல்லாத ஒன்றை இருப்பதாக ஏற்று, அதைப் பெறுவதோ அதன் மீதான ஆசையைத் துறப்பதோ எல்லாம் 'அஸத்' தொடர்பின் விளைவு. 643

பொருள், செயல், நபர் இவற்றின் தொடர்பு மனிதனை அடிமைப்படுத்தும். இதன் 'அஸங்கம்'-தொடர்பின்மை நிலைபெற்றால் மனிதன் சுதந்திரனாகி ஸ்வாதீனம் பெறுகிறான். 644

நம்மில் ஜடத்தன்மை (உலகியல்)யின் தாக்கத்தை நாம் உணரும் வரை நம் இருப்பு ஜடத்தில் தான். சின்மய பரமாத்ம தத்வத்தில் அன்று. 645

உடல்-உலகின் தொடர்பு (ஆழ்ந்த உறக்கத்தில்) நீங்குவதால் ஓய்வு கிடைக்கிறது. அதுபோன்றே அவற்றின் தொடர்பு முற்றிலும் நீங்கிவிட்டால் மிக உயர்ந்த ஓய்வு (முக்தி) பெறலாம். 646

உடல்-உலகின் தொடர்பறுக்க ஆராய்ச்சியே அவசியமானது; அப்யாஸம் அன்று. 647

முடிவற்ற ப்ரம்மாண்டத்தில் எந்த ஒரு பொருளும் நமதோ, நமக்காகவோ கிடையாது. 648

எந்த ஒரு பொருளுக்கு இடம், காலம், செயல், பொருள், நபர், நிலை, நிகழ்ச்சி, சூழ்நிலை இவற்றில் இருப்பு என்பது கிடையாதோ, அப்பொருளுக்கு எங்குமே இருப்பு என்பது கிடையாது. அதாவது எப்போதுமே இன்மைதான். அதுதான் 'அஸத்' 'நாஸதோ வித்யதே பாவ: ।' (கீதை 2/16) 649

## நல்ல, தீய இயல்புகள்

தீய குணங்கள், தீய ஒழுக்கங்கள் அனைத்துமே மனிதனின் படைப்புத்தான். ஈசனால் படைக்கப்பட்டவை அல்ல. பகவான் 'ஸத்'. தீய குண-ஒழுக்கங்கள் 'அஸத்'. ஸத்திலிருந்து அஸத் எவ்வாறு தோன்ற முடியும்? 650

உலகியலில் அசட்டை தோன்றினால், எவ்வித முயற்சியுமின்றித் தானே நல்லியல்புகள் வந்தடையும். 651

பகவானை எதிர்கொள்வதால் எல்லா நல்லியல்புகளும், உலகை எதிர்கொள்வதால் எல்லாத் தீய இயல்புகளும் ஏற்பட்டு விடும். 652

தனது வலிமையற்ற நிலையில் துக்கமும், பகவானின் கருணையில் திடவிசுவாஸமும், இருக்குமானால் விரும்பத்தகாத தீய குணங்கள் அழிவுறும்; நாம்பெற விரும்பும் நல்லியல்புகள் தோன்றிவிடும். 653

தன்னில் நற்குண, நல்லொழுக்கங்களை உணர்வதால் செருக்கேற்படும். தன்னில் தீயகுண-ஒழுக்கங்கள் இருப்பதாக உணர்வதால் அவை நிலைபெற்றுவிடும். 654

# ஸத் ஸங்கம் மற்றும் தீயசேர்க்கை

ஸத்ஸங்கத்தால் கிடைக்கும் நன்மைகள் எத்தனையோ, அத்தனை தனித்திருந்து ஸாதனைகள் செய்வதால் கிடைக்காது. 655

யாதொன்றும் செய்யாமலேயே ஸத்ஸங்கத்தினால் மேன்மை பெறலாம். தீய சேர்க்கையால் யாதொன்றும் செய்யாமலேயே வீழ்ச்சி கிடைக்கும். 656

தீய சேர்க்கைகளை விட்டொழிக்காமல் ஸத்ஸங்கத்தால் கண்கூடான லாபம் பெற இயலாது. 657

கேட்பது மட்டும் ஸத்ஸங்கம் ஆகிவிடாது. 'ஸத்' உடன் தொடர்பு கொள்வதும், அதற்குப் பெருமை தருவதுமே ஸத்ஸங்கம். 658

எங்கும் நிறைந்த ஒரே பரமாத்ம தத்வத்தைப் பார்ப்பதே 'ஸத்ஸங்கம்'. 659

பகவானிடம் ப்ரேமை ஏற்படுவதும் ஸத்ஸங்கம் தான். அழியும் உலகியல் பொருட்களின் மீதான பற்று (மோஹம்) அழிவதும் ஸத்ஸங்கம் தான். 660

உடலுக்கு உணவு; ஆன்மிக வாழ்க்கைக்கு ஸத்ஸங்கம். 661

மனித உடலை அடிக்கடிப் பெற இயலாது; அது போன்றே ஸத்ஸங்கத்தையும் அடிக்கடிப் பெற இயலாது. 662

நமது முயற்சியால், ஸத்ஸங்கம் கிடைக்காது. பகவானது கருணையாலேயே ஸத்ஸங்கம் கிடைக்கும். 663

தன்னலம் உள்ள இடத்தில் ஸத்ஸங்கம் ஏற்படாது; தீயசேர்க்கைதான் விளையும். 664

எந்த ஒரு சூழ்நிலையிலும் ஆனந்தமாக இருக்கும் வித்யையை ஸத்ஸங்கம் கற்றுத் தருகிறது. 665

நல்ல விஷயங்களுக்கு மதிப்பளிப்போம் - இதுவே ஸத்ஸங்கம். 666

வயிறு மந்தமானால் உணவு செரிக்காதிருப்பது போன்று, உள்ளே ஈடுபாடு குறைந்தால் ஸத்ஸங்க விஷயம் புரிபடாது. 667

பகவானது தனிப்பெருங் கருணையைப் புரிந்து கொள்வது - ஸத்ஸங்கம் கிடைப்பதால். 668

வாணிபத்தில் லாபமும், நஷ்டமும் ஏற்படலாம். ஸத்ஸங்கத்தால் லாபம் மட்டுமே. நஷ்டம் என்பதே கிடையாது. 669

ஸத்ஸங்கத்தில் பெறும் விஷயங்களுக்கு மதிப்பளிப்பதால் வ்ருத்திகளில் மாறுபாடு தெரிகிறது. மன விகாரங்கள் தாமே அழிந்து விடுகின்றன. 670

ஸத்ஸங்கத்தில் கிடைக்கும் உயரிய விஷயங்களைப் படித்தோ, கேட்டோ புரிந்து கொள்ள முடியாத அளவு போகங்களில் உள்ள பற்று, புத்தியில் ஜடத்தன்மையை ஏற்றி விடுகிறது. 671

உலகிலிருந்து சிறிதேனும் பெற விழையும் போதே தீயசேர்க்கை தொடங்கி விடுகிறது. 672

உடல்-உலகுடன் தான் (ஸ்வயம்) தொடர்புள்ளவனாகக் கருதுவதே தீய சேர்க்கை. 673

தீய சேர்க்கையால் தீங்கில்லை; அதை (அந்தக்கரணம்வரை) ஏற்றுக்கொள்வதாலேயே தீமை விளைவிகிறது. 674

மறுமை, தர்மம், ஈசுவரன், இவற்றை ஏற்காத நாத்தி கர்களின் உறவே அனைத்திலும் அதிகமான வீழ்ச்சியைத் தருகிறது. 675

உள்ளிருக்கும் குறைபாட்டால் வெளியே தீய சேர்க்கையால் பாதிப்பு ஏற்படுகிறது; தனது இனத்தைச் சார்ந்தவற்றி லேயே கவர்ச்சி ஏற்படுகிறது. பிற இனங்களில் விளை வதில்லை. 676

அடியாரிணக்கம், நல்ல ஆராய்ச்சி, அறநூல்கள், துயரம் இவை நான்கும் ஒரு விவேகிக்கு உலகுடனான தொடர்பை நீக்கும். 677

பல்லாண்டுகள் செய்யும் ஸாதனைகளால் கிடைக்கும் தத்வஞானம் ஸத்ஸங்கத்தால் உடனேயே கிடைத்து விடும். 678

ஆன்மிக ஸாதனைகள் செய்வது, தானே பணம் சம்பாதிப்பது போன்றது. ஸத்ஸங்கம் சேர்வது பணக்காரர் ஒருவருக்கு தத்துப் போவது போன்றது. ஸ்வீகாரம் போகிறவன் சேர்த்து வைக்கப்பட்ட செல்வத்தை அடைவது போன்றே ஸத்ஸங்கம் சேர்பவன் ஸாதனைகள் செய்யாமலேயே ஸாதனைகள் செய்து முடித்தவன் ஆகிறான். 679

## காலம்

செலவழிந்த செல்வத்தை ஈட்ட முடியும், கழிந்து போன காலத்தை திரும்பப் பெற இயலாது. பணத்தைப் பாதுகாத்து வைக்கலாம். காலத்தைப் பூட்டி வைக்க முடியாது. ஆகவே வெகு கவனத்துடன் காலத்தை நல்ல முறையில் செலவிட வேண்டும். 680

காலத்தைச் செவ்வனே செலவிட்டுப் பணமும், புகழும் சேர்க்கலாம். ஜீவன்முக்தனாகவும் முடியும். 681

நேரத்தைப் பயனுள்ள வகையில் செலவிடத் தெரியாத மனிதன் எந்த ஒரு துறையிலும் உயர்வு பெறமாட்டான். 682

காலம் கடந்து கொண்டிருப்பது போல் தோற்றமளித்தாலும், உடல்தான் உண்மையில் கடந்து (அழிந்து) கொண்டிருக்கிறது. 683

கழிந்து சென்ற காலத்தைப் பரமாத்ம ப்ராப்திக்கான முயற்சியில் முன்னேற்றம் பெற எவ்வளவு சீரிய முறையில் பயன்படுத்தியுள்ளோம் என ஆராய்ந்து பார்ப்போம். 684

## ஸாதகன்

விலக்கப்பட்ட கர்மங்களைச் செய்து கொண்டிருப்பவன் ஸாதகன் ஆக முடியாது. 685

ஸாதகன் அஸத்தை அசட்டை செய்வதாலும், ஸத்தை நோக்கிச் செல்வதனாலும், ஏதோ ஒரு ஸாதனையைச் செய்துதான் ஆகவேண்டும். அப்போதுதான் ஆபத்து (ஸம்ஸார பயம்) நீங்கும். 686

ஸாதகன் "நான் பரமாத்ம ப்ராப்தி பெற வேண்டும்" என்ற தீர்மானமும், உறுதியான பிடிப்பும் கொள்வது மிகவும் தேவையான ஒன்று. 687

ஸாதகன் ஒருபோதும் தன்னை போகி (புலன்நுகர்ச்சி கொள்பவன்)யாகவும், உலகியல் சார்ந்தவனாகவும் கருதக் கூடாது. அவனிடம் 'நான் ஸாதகன்' என்ற விழிப்புணர்வு எப்போதும் இருந்து கொண்டிருக்க வேண்டும். 688

ஜடத்தன்மையில் தொடர்பும் - வெறுப்பும் எந்த அளவோ, அந்த அளவு அவனிடம் தனிச்சிறப்பு குறையும், அல்லது கூடும். 689

மிகுந்த எச்சரிக்கையுடன் இருப்பவனே ஸாதகன். 690

ஸாதகன் தனது இருப்பைப் பரமாத்மாவிடமே வெகு இயல்பாக உணர்தல் வேண்டும். அதுவே உண்மையும்கூட, உலகுடனான தனது இருப்பை உணரும் ஸாதகன் ஸாதனையிலிருந்து வீழ்ச்சியுறுகிறான். 691

தன்னால் பிறருக்கு என்ன லாபம், என்ன நன்மை, என்ன தொண்டு ஏற்பட்டதென ஸாதகன் தன்னையே ஆராய்ந்து பார்க்க வேண்டும். 692

ஸாதகனுக்குத் தனது ஸாதனையிலும், ஸித்தியிலும், கவலை தோன்றக்கூடாது. பகவத்ப்ராப்தி பற்றிய விஷயத்திலேயே வ்யாகூலம் (தன்னிரக்கம்) ஏற்படவேண்டும். கவலை பகவானிடமிருந்து வெகு தொலைவில் விலக்குகிறது. வ்யாகூலம் பகவானின் அருகில் சேர்க்கிறது. 693

தனது தனித்தன்மை (வ்யக்தித்வம்) பற்றிய உணர்வு இருக்கும்வரை ஸாதகன் உய்வுப் பாதையில் த்ருப்தி அடையக்கூடாது. 694

தனது நிலையில் த்ருப்தியின்மை ஏற்படாத வரையில், ஸாதகன் மேம்பட இயலாது. 695

மதக்கோட்பாடுகளில் காணப்படும் வேற்றுமையோ, ஒரு கோட்பாட்டிற்கு ஏற்ப ஸாதனைமுறைகளை ஏற்று வாழ்வதோ குற்றமன்று. பிறர்தம் கோட்பாடுகளில் குறை காண்பதோ, அவற்றைக் கண்டிப்பதோ, வெறுப்பதோ தான் குற்றமாகும். 696

அழிவுறும் பொருட்களைப் பயன்படுத்த நேரிட்டால் ஸாதகன் அதனால் மோஹிக்காமலும், அதற்கு மதிப்பளிக்காமலும் கவனமாக இருக்கவேண்டும். அழியும் பொருட்களைப் பயன்படுத்துவோம். ஆனால் அதற்கு அடிமையாக மாட்டோம். 697

ஸாதகன் மதவாதியாகாமல் தத்வவாதியாக வேண்டும். 698

போகிக்குத் தூக்கம் தோழன். ஸாதகனுக்கு நித்திரை எதிரி. 699

பகவானை வழிபடாதவனுக்கோ இது கலியுகம். வழிபடும் ஸாதகனுக்கு இது மிக உயர்ந்த யுகம். 700

ஸாதகனுக்கு ஒவ்வொரு கணமும் கவனம் அவசியம். கவனம் என்பதன் உட்பொருள் - ஒருவரிடமிருந்தும் ஒருபோதும், யாதொன்றையும் எதிர்பாராதிருப்பது. 701

இருபத்து நான்கு மணிநேரமும் ஸாதனையில் ஈடுபடுபவனே ஸாதகன். 702

மிகச் சிறிய செயலோ, மிகப் பெரிய செயலோ ஸாதகன் வெகு கவனமாக இருக்க வேண்டும். அச்செயல்பாடுகளில் தன்னல எண்ணம் சிறிதளவும் கலந்து விடக்கூடாது. 703

''எனது எந்தவொரு செயலாலும் பிறர் வருந்த நேரிடக்கூடாது'' என்ற கவனம் ஒரு ஸாதகனுக்கு ஒவ்வொரு கணமும் இருக்க வேண்டும். பிறர் துன்புற நேர்ந்தால் பல ஆண்டுகள் ஸாதனை புரிந்தாலும் சாந்தி கிடைக்காது. 704

ஸாதகன் எத்தனை அறிந்து கொண்டுள்ளானோ அந்த அளவு ஏற்றுச் செயல்படுத்தத் துவங்க வேண்டும். அதனால் மேலும் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள், தானே புரிந்து விடும். 705

உடல் உலகைச் சார்ந்துள்ளது. தானோ (ஸ்வயம்) பரமாத்மாவைச் சார்ந்து நிலைபெற்றவன். ஆகவே ஸாதகன் உலகியலில் நிலைபெறாமல் பரமாத்மாவில் தனது சார்பு நிலையை உணர்தல் வேண்டும். 706

"செய்யத்தக்கது, செய்யத்தகாதது இவற்றை நிர்ணயிப்பது சாஸ்த்ரங்களின் பொறுப்பு. நடக்க வேண்டியது, நடக்கக்கூடாதது இவற்றை நிர்ணயிப்பது பகவானின் பொறுப்பு" என்றிருப்பது ஸாதகனின் கடமை. 707

ஸாதகன் ஒருபோதும் தன்னை ஸித்தி பெற்றவன் என்று கருதக்கூடாது. தன்னை ஸாதகன் என்றே எண்ணியிருக்க வேண்டும். ஸித்தன் எனக் கருதிவிட்டால் ஏமாற்றமே எஞ்சும். 708

ஸாதகனது பணி அதிகாரம் செலுத்துவதன்று; நலம் செய்கின்ற தத்வதர்சியின் கட்டுப்பாட்டில் வாழ்வதே. 709

துன்பக் கலப்புள்ள, நிலையற்ற சுகம் தனக்கு ஏற்படவே வேண்டாம் என்பதில் ஸாதகன் கவனத்துடன் இருக்க வேண்டும். 710

முயன்று கிடைக்கும் சுகம் ஸாதகனுக்கு மிகுந்த தடையை விளைவிக்கும். 711

ஸாதகனின் நோக்கம் விஷயங்களைக் கற்பதில் இருக்கக் கூடாது. ஆத்ம அனுபவத்தில் தோய்வதில் இருக்கவேண்டும். கல்வியால் பெறும் அறிவால் அறிவாளியாகவோ, சிறந்த பேச்சாளனாகவோ எழுத்தாளனாகவோ ஆகலாம். தத்வ ஞானியாகவோ, ஜீவன் முக்தனாகவோ, பகவத் பக்தனாகவோ முடியாது. 712

ஆரம்பத்தை நோக்குபவன் ஸாதகனாகான். விளைவில் கண் செலுத்துபவனே ஸாதகன். 713

'நான் சிறந்த ஸாதகன்' என்ற எண்ணம் கர்வத்தின் விளைவாகத் தோன்றுவது; தடையை ஏற்படுத்தும். கடமையின் கண்ணோட்டத்தில் இந்த எண்ணம் உதவி செய்யும். 'நான் ஸாதகன்; அவன் எனக்கு மாறானவன்' என்ற

எண்ணம் செருக்கின் விளைவு, 'நான் ஸாதனைக்கு இடையூறான செயலை எப்படிச் செய்வேன்?' என்ற எண்ணம் தன்னிடம் உள்ள அபிமானம். 714

ஸாதகன் 'ஸத்ய தத்வம்' ஒன்றையே பின்பற்றுபவனாக இருக்கவேண்டும். தனிநபர், கோட்பாடு இவற்றைப் பின்பற்றுபவனாகக் கூடாது. 715

## ஸாதனை

திருநாம ஜபம் மட்டுமே வழிபாடாகி விடாது. பகவானுக்குகந்த எந்த ஒரு பணியும், அவரிடம் ஈடுபாட்டை வளர்க்கும் எந்த உயரிய பாவமும் வழிபாட்டில் சேர்ந்தவைதாம். 716

பகவத்ப்ராபதி ஒன்றே நோக்கமாகிவிடுமாகில், எல்லாச் செயல்களும் ஸாதனைகளாகிவிடும். 717

உலகியல் சார்ந்த எவ்வொரு செயலையும் பற்றின்றி, கடமை மட்டுமே என்ற கருத்துடன் செய்ய வேண்டும். ஆனால் பகவானது செயல்களான ஜபம், த்யானம் முதலியவற்றில் ஆழ்ந்து, ஒன்றி, தனது முக்யமான காரியம் என்ற பாவத்துடன் செய்தல் வேண்டும். 718

'நான் பகவானையே சேர்ந்தவன்; பகவானே என்னுடையவர்' என்பதை ஸாதகன் இதயபூர்வமாக உணர்ந்துவிட்டால் அவன் செய்வதெல்லாம் ஸாதனையாகவே அமையும். 719

அல்லும் பகலும் த்யானத்திலும், வழிபாட்டிலும் ஆழ்ந்துள்ளவனால் உலகிற்கு நன்மைகள் ஏற்படும் அளவு அல்லும் பகலும் செயல்பட்டுக் கொண்டிருப்பவனால் நன்மைகள் விளையா. 720

''நான் பரமாத்மாவை நோக்கியே செல்ல வேண்டும்'' என்ற தீர்மானமான முடிவே ஸாதனைகள் அனைத்துக்கும் மூலம்.

ஆனால் உலகம் நிலையானது என்று கருதினால் இந்த அறிவு தோன்றவே தோன்றாது. 721

தனது ஸாதனையின் வலிமையில் கர்வம் ஏற்பட்டால் தன்னில் உள்ள குறைபாடுகள் பற்றிய கவலையும் தோன்றும். 722

எந்த ஒரு ஸாதனை முழுமையானாலும், வாழ்வதில் ஆசை, மரணபயம், பெறுவதற்கு பேராசை, செயல்பாட்டில் பற்று இந்நான்கும் முற்றிலும் அழிந்துவிடுகின்றன. 723

ஜடப்பொருட்களின்பால் ஒவ்வொரு ஜீவனுக்கும் பற்றுடன் கூடிய தொடர்பு உள்ளது. அதை அழித்தால்தான் ஸாதனைகள் அனைத்தும் பொருள்படைத்ததாகும். 724

அப்யாஸத்திற்கு வழிபாடு என்பது பொருளன்று. பகவானது நினைவும், அவர்பால் கொண்ட அன்புமே வழிபாடாகும். அவரைத் தன்னுடையவர் என்று ஏற்றுக் கொள்ளாமல் நினைவும், அன்பும் விழித்தெழா. 725

ஸாதனை என்பது தன்னிலிருந்து ஏற்படுவது. மனம், புத்தி, புலன்களிலிருந்து அன்று. 726

பரமாத்மப்ராப்திக்கான ஸாதனைகள் அனைத்துக்கும் பரமாத்மப்ராப்தியைக் காட்டிலும் அதிகமாக மதிப்பளிக்க வேண்டும். 727

ஸாதனைக்குத் தனித்த மதிப்பளித்தால் அது வலிமை பெறும். உரிய மரியாதை தராததால் அது தொய்வுறுகிறது; உரிய பயனும் கிடைப்பதில்லை. 728

பகவானிடம் அழைத்துச் செல்லும் ஸாதனைகள் 'ஸ்வதர்மம்' ஆகும். உலகின் பால் இட்டுச் செல்லும் செயல்கள் 'பரதர்மம்' ஆகும். 729

பிறரைத் துன்புறுத்துபவனின் மனம் வழிபாட்டில் லயிக்காது. 730

கிடைத்த சூழ்நிலையில் ஸாதனையைத் தொடர வேண்டும். அனுகூலமான நிலையை எதிர்நோக்குவது ஸாதனை யாகாது. 731

உலகின் தொடர்பை அறுப்பதும், பகவானின் நித்ய ஸம்பந்தத்தைக் கண்டறிவதுமே எல்லா ஸாதனை களுடையவும் ஸாரம் ஆகும். 732

உலகியலிலிருந்து ஒதுங்குவதற்கும், பகவானிடம் ப்ரேமை பெறுவதற்குமே ஸாதனைகள் எல்லாம். 733

எந்த ஒரு உயர்நிலை பெற்றாலும், ஸாதகன் தனது ஸாதனையில் த்ருப்தி அடையக்கூடாது. 734

எந்த ஒரு சூழ்நிலை ஏற்பட்டாலும், அதில் இன்புற்றிருப்பதே 'வழிபாடு' ஆகும். 735

பகவானை வழிபடுங்கால் உலகை மறந்து விடவேண்டும். உலகில் செயலாற்றுங்கால் பகவானை மறக்கக்கூடாது. 736

தனக்காக ஜபம், தவம், த்யானம் இவற்றைச் செய்வது அரக்கத்தன்மை. பிறர் நலத்துக்காக ஜபம், தவம், த்யானம் இவற்றைச் செய்வது மனிதத்தன்மை. 737

அதிக லாபம் தருவது எதுவோ, அதுவே சிறந்த வியாபாரம் என்பதுபோல் மனத்தை பகவானிடம் ஆழ்ந்து ஈடுபடச் செய்வது எதுவோ, அதுவே உயர்ந்த ஸாதனை. 738

எந்த ஸாதனை எளிதாகப்படுகிறதோ, அதைச் செய்யத் துவங்கி விட்டால், கடினமாகத் தெரிவதும், எளிதாகிவிடும். புரியாததும், புரிய ஆரம்பித்துவிடும். 739

"கரணத்தின் (புலன், பொறிகள்) உறுதுணை நன்கு இருக்கட்டும்; ஆனால் அவற்றைச் சார்ந்து இருக்கக் கூடாது" இதுவே கரணநிரபேக்ஷ (கரணங்களின் துணை பேணாத) ஸாதனம் ஆகும். 740

ஸாதனை என்பது நித்யகர்மங்களைப் போல் குறித்த நேரத்திற்கு மட்டுமானது அன்று. அது இடையறாது நிகழ்ந்து கொண்டிருக்க வேண்டும். 741

குழந்தைப் பருவத்திலும், வாலிபப் பருவத்திலும் வழிபாடு-ஸாதனைகள் செய்யாதவர், முதுமையில் ஒன்றிலும் ஈடுபடமுடியாது. 742

"நான் உடல் (சரீரம்) அல்லன்; உடலுக்குரியவன் (சரீரி)". இது சரியாகப் புரிந்துவிட்டால் எல்லா ஸாதனைகளும் எளிதாகும். 743

இடையறாது (கணந்தோறும்) நடைபெறுவதே உண்மையான ஸாதனை. இடையறாத ஸாதனையின்றி இப்பிறவியில் ஸித்தி ஏற்பட இயலாது. 744

பகவானது நினைவு தானே தோன்றாமல், அவரை நினைவு படுத்திக் கொள்ள வேண்டும் என்று இருந்தால் ஸாதனை துவங்கவே இல்லை என அறிந்து கொள்ள வேண்டும். 745

உலகுடன் தொடர்பு வைத்துக் கொண்டு எத்தனை ஸாதனைகள் செய்தாலும், ஸித்தி அருகில் இல்லை. 746

தத்வத்தில் தோய்ந்து விட்டால் ஸாதனை தானே ஏற்படும். ஈடுபாடில்லையெனில் ஸாதனை செய்ய நேரிடுகிறது. தானே ஏற்படுவது உண்மை; வலிந்து செய்வது போலி. 747

அன்றாட வேலைகள் எனது என்றும், எனக்கானது என்றும் நினைத்துவிட்டால் பகவானை மறந்து விட நேரும். 748

உண்மையில் ஸாதனை என்பது கிரியை அன்று. செயலும், பொருளும் ஸாதனையில் சேராதவை. ஸாதனையில் எண்ணமும், நோக்கமும், விவேகமுமே முக்கியம். 749

எல்லா ஸாதனைகளுமே மேன்மையளிக்க வல்லவைதாம். ஆனால் எந்த ஒரு ஸாதனையில் நமக்கு ருசியும்,

நம்பிக்கையும், தகுதியும், சிரத்தையும் உள்ளதோ அதுவே நமக்கு உயர்வு தரும். 750

## போகமும், ஸங்க்ரஹமும்
### (இன்ப நுகர்ச்சியும், பொருள் சேர்ப்பதும்)

மக்களுக்கு போகத்திலும், ஸங்க்ரஹத்திலும் எந்த அளவு பற்றுதல் வளர்கிறதோ, அந்த அளவு ஸமுதாயத்தில் அதர்மம் பெருகுகிறது. அதர்மம் வளரும் அளவு பாவச்செயல், கலஹம், மோசடி ஆகிய குற்றங்களும் வளர்கின்றன. 751

எந்த போகத்தை அனுபவித்தாலும் கடைசியில் அதில் சுவை அழிகிறது. இது நியதி. ஆனால் மனிதன் அச்சுவையின்மைக்கு மதிப்பளித்து, அதை நிலைபெறச் செய்யாததே அவன் செய்யும் குற்றம். 752

போகி துன்பங்களிலிருந்து தப்பிக்க முடியாது. ஏனெனில் போகம் ஜடத்தின் தொடர்பால் ஏற்படுகிறது. ஜடத்தின் தொடர்புதான் பிறப்பு இறப்பு எனும் பெருந்துயருக்குக் காரணமாகிவிடுகிறது. 753

ஸாமானிய மனிதர்கள் எந்த போகங்களில் சுகம் காண்கிறார்களோ, அவற்றை விவேகியான மனிதன் துன்ப வடிவாகவே காண்கிறான். ஆகவே அவன் அந்த போகங்களால் இன்புறுவதில்லை. அவற்றுக்கு வசமாவதும் இல்லை. 754

எந்த அளவு படித்தாலும், திறமையும் ஆற்றலும் இருந்தாலும், எவ்வளவு தகுதிகளைப் பெற்றாலும், சிறந்த விரிவுரை யாளனாக ஆனாலும், எவ்வளவு ஆராய்ச்சிகள் செய்தாலும், உலகியல் சுகத்தைப் பெறும் எண்ணம் (வ்ருத்தி) அழியாதவரை பரம சாந்தி கிட்டாது. 755

உலகப் பொருட்களின் சேர்க்கையால் கிடைக்கும் சுகம் நம்முடையதும் அன்று; நமக்கானதும் அன்று. ஏனெனில் நாம் அழிவின்றி எப்போதும் உள்ளவர்கள். சுகம் அழியும் பொருள். 756

மக்களுக்கு போக-ஸங்க்ரஹத்தின் வ்ருத்தி அதிகமாவதால் பஞ்சம் ஏற்படுகிறது. 757

நம்மிடம் உள்ள பொருட்கள், திறமை, ஆற்றல், தகுதி அனைத்துமே சமுதாயத்தினுடையவை. நமதல்ல. அவற்றை நம்முடையவை எனக்கருதி சுகம் பெற ஆரம்பித்து விடுகிறோம். இதுவே நாம் செய்துவரும் தவறு. இதனால் நமது வசமிழந்து துன்பத்தை அனுபவிக்க நேரிடுகிறது. 758

எங்கு உலகாயத இன்பம் கிடைப்பதாகத் தென்பட்டாலும் அங்கு ஏதோ அபாயம் உள்ளது என உணர்ந்து கொள். 759

பொருள், நபர் இவற்றின் சுகம் பெறுதல் ஜடத்தன்மை. 760

உலக போகங்கள் தரும் இன்பங்கள் முதலில் இன்பம் போல் தோன்றினாலும், விளைவு விஷம் போல் ஆகி எப்போதும் தீமைபயப்பவையாகிவிடுகின்றன. 761

மனிதன் கிடைக்கும் பொருட்கள் மூலம் போகத்தில் ஈடுபடலாம். அவற்றின் துணை கொண்டு பிறருக்குத் தொண்டும் செய்யலாம். இன்பம் துய்ப்பதால் வீழ்ச்சி. தொண்டு புரிவதால் உயர்வு. 762

தன் விருப்பத்திற்கிணங்க இன்பம் துய்ப்பதில் ஈடுபடு பவன், தான் விரும்பாவிடினும், துன்பத்தை அனுபவிக்கவே நேர்கிறது. 763

பொருளைப் பிறர்நலனில் ஈடுபடுத்துவது அதை நல்லமுறை யில் பயன்படுத்துவதாகும். தனது இன்பத்திற்காகப் ஈடு படுத்துவது அதைத் தீயவழியில் பயன்படுத்துவதாகும். 764

இன்பமே இலக்காக பொருள், நபர், சூழ்நிலை, அவஸ்தை, (விழிப்புநிலை, கனவுநிலை, ஆழ்ந்த உறக்கநிலை) இவற்றில் சுகம் காண்பவனிடம் பகவானைப் பெறும் பேராவல் விழிப்புறுவதில்லை. 765

ஒருவன் துறவியாயினும், இல்வாழ்வானாயினும், வேறு யாராயினும் உலகில் இன்பம் காணும்வரை துன்பத்திலிருந்து விடுபட முடியாது. 766

உலகியல் இன்பம் கிடைத்தாலும், கிடைக்காவிடினும் அதில் ருசி இருந்தால் வீழ்ச்சி தான். 767

மனிதன் எவ்வளவு இன்பம் துய்க்கிறானோ அவ்வளவு அதற்கு அடிமைப்படுகிறான். எவ்வளவு அடிமைத்தனமோ அத்தனை துன்பம். ஆகவே இன்பநுகர்ச்சியைத் துறப்பது மிகவும் அவசியம். 768

புத்தியில் ஜடத்தன்மை (போகமும், ஸங்க்ரஹமும்) உள்ளவன் எவ்வளவு பேரறிஞனாக இருப்பினும், அவனது வீழ்ச்சி நிச்சயம். புத்தியில் ஜடத்தன்மையை ஒழித்து, பகவானை அடைவதையே நோக்கமாகக் கொண்டவன் வித்வானாக இல்லாவிடினும் அவன் உய்வு பெறுவது நிச்சயம். 769

நாம் எதனிடமிருந்து சுகம் பெறுகிறோமோ அதற்கு அடிமைப்பட நேர்ந்து விடுகிறது. இன்பம் துய்ப்பவன் ஒருகாலும் சுதந்திரனாக மாட்டான். 770

நாம் இன்பம் துய்ப்பவராகக் கூடாது. இன்பம் தருபவராக வேண்டும். 771

யோகமோ, போகமோ மனிதன் எதில் சுகம் காண விழைகிறானோ அதில் சிக்குண்டு விடுகிறான். 772

# இன்பமும், துன்பமும்

உலகப் பொருட்களுக்காக ஒருவனுக்கு நேரும் துன்பங்களை பகவான் பொருட்படுத்துவதில்லை. தமது காரணமாக ஒருவனுக்கு நேரும் துன்பத்தை அவர் பொறுத்துக் கொள்வதுமில்லை. 773

பகவானது மங்கலமயமான ஏற்பாட்டின்படி நேரும் எவ்விதச் சூழ்நிலையும்-அது அனுகூலமானதோ (சுகம் தருவதோ) ப்ரதிகூலமானதோ (துக்கம் தருவதோ) நமது நன்மைக்காகவே ஏற்படுகிறது. 774

இன்புறுவதோ, துன்புறுவதோ நமது முன்வினைப் பயனல்ல. அவை நமது அறிவின்மையின் பயன்கள். அந்த அறிவின்மை ஸத்ஸங்கத்தால் நீங்கும். 775

ஸாதகன் பிறருக்கு இன்பம் தருவதில் ஒரு கருமியைப் போல் பேராசை கொண்டிருக்க வேண்டும். இதனால் அவன் இன்ப துன்பங்களுக்கு அப்பாற்பட்டவனாகி உயர்ந்து விடுகிறான். 776

தனது இன்பத்திற்காக முயற்சி செய்வது, துன்பத்திற்கு அழைப்பு விடுப்பது போன்றது. பிறர்தம் இன்பத் துக்காக முயற்சி செய்வது, ஆனந்தத்துக்கு அழைப்பு விடுப்பதாகும். 777

இன்பத்தையோ, துன்பத்தையோ தரும் சூழ்நிலை விளைவது நமது வினைப்பயன். அதனால் இன்பமோ, துன்பமோ அனுபவிப்பது நமது அறிவின்மை, முட்டாள்தனம். வினைப்பயனை ஒழிப்பது நம் கையில் இல்லை. ஆனால் அறிவின்மையை ஒழிப்பது நம்மால் செய்ய முடிவது தான். 778

துயர் தரும் சூழ்நிலையால் பாதிப்படையாமல், இன்பம் தரும் சூழ்நிலையில் பிறர்க்குத் தொண்டு செய்பவன் வெகு எளிதாக ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான். 779

இயல்பாக நேரும் சுகத்தில் நாட்டம் ஏற்படுவதால், இன்ப-துன்பங்களின் தொடர் முடிவின்றி நீண்டு கொண்டே செல்கிறது. 780

அனுகூல நிலையில் இன்பம் காணும் பழக்கமே பிரதிகூலமான சூழ்நிலையில் துயர் தருகின்றது. ஏனெனில், சூழ்நிலைகாரணமாக விளையும் இன்பத்தில் சுகம் காண்பவன் துன்பத்திலிருந்து தப்பிக்க முடியாது. 781

இன்பத்தின் இச்சையை விடச்செய்யவே துன்பம் நேர்கிறது. 782

தனக்காகப் பிறரிடமிருந்து இன்பம் விழைபவனுக்கு கொடிய துன்பத்தை அனுபவிக்க நேரும். 783

நாம் அனுபவிக்கும் துன்பத்திற்கு நாமே காரணம். வேறு யாரும் அல்ல. நமது துன்பத்திற்குப் பிறர் காரணம் எனக் கருதும்வரை நமது துன்பம் நீங்காது. 784

தனது சுகத்தில் ஆனந்தமடைபவன் துயருறநேரும். பிறர் தம் இன்பத்தில் ஆனந்தமடைபவனுக்கு எந்நாளும் துன்பமில்லை.* 785

உடலை ''நான்'' எனவும், ''எனது'' எனவும் கருதுவதே துன்பங்களனைத்துக்கும் காரணம். 786

---

***★ (உலகியல் இன்பங்களைத் துறந்து இறைபணியே உயிர் மூச்சாகக் கொண்டு வாழ்ந்த மெய்யடியார்கள் ''இன்பமே எந்நாளும் துன்பமில்லை'' ''நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்'' என்று மிகக் கொடிய சூழ்நிலைகளிலும் துன்பமும், அச்சமும் நீங்கியவராய் வாழ்ந்தனர்.)***

உலகில் இன்பம் பெறும்வரை, ப்ரக்ருதியின் தொடர்பு அழிவுறாது. 787

ஒருபொருள் இல்லாததால் துன்பம் இல்லை. அது கிடைக்க வேண்டுமே என்ற எண்ணமே துயர் தருகிறது. 788

துன்பம் ஆராய்ச்சியின்மையின் விளைவு; விரும்பும் பொருள் இன்மையால் அன்று. விவேக ஆராய்ச்சியால் துயர் நீங்குகிறது. பொருள்களால் துயர் நீங்குவதில்லை. 789

இன்பம் நிர்விகல்பத்தில் (விகாரங்களற்ற நிலை) உள்ளது. போகங்களில் இல்லை. 790

உலகில் எங்கு இன்பம் தென்பட்டாலும் அங்கு விசார விவேகத்துடன் பார்த்தால் துன்பமே புலப்படும். ஏனெனில் உலகம் துன்ப வடிவானது. ''து:காலயம்'' (கீதை 8/15). 791

கேட்பதில் ஆசை; கேட்க முடியாவிட்டால் துன்பம். பார்ப்பதில் ஆசை; ஆகவே பார்க்க முடியாவிட்டால் துன்பம். வலிமையில் ஆசை; வலிவின்மையால் துயரம். இளமை பெற ஆசை; முதுமைநிலையில் துயரம். உட்கருத்து - பொருளின் இன்மையால் துன்பம் விளைவதில்லை. அதன் மேலுள்ள விருப்பத்தால் - அதன் இன்மையை உணர்வதால் துன்பம் ஏற்படுகிறது. 792

உலகுடன் தொடர்பு கொள்வோமானால் துன்பத்துக்கு முடிவிருக்காது. பகவானுடன் ஸம்பந்தம் கொள்வோமானால் இன்பத்துக்கு முடிவிராது. (***கொள்ளமாளா இன்ப வெள்ளம் - அருளிச் செயல்***) 793

சுகம் பெற விழைந்தால் பிறருக்கு சுகமளி. விதைத்ததுதானே விளையும்! 794

உலகியலின் இன்பம், ஆபத்துக்கு ஆணிவேர். 795

எல்லாமே பரமாத்மா தான் - ''வாஸுதேவ: ஸர்வம்'' ***(நிற்கின்றதெல்லாம் நெடுமால்).*** ஆனால் அவையெல்லாம் இன்ப நுகர்வுக்கானவையல்ல. அவை இன்பநுகர்ச்சிக் கானவை என்று இன்பம் பெற விழைபவன் துன்பமடைந்து கொண்டே இருப்பான். 796

''எனக்கு இன்பம் எப்படிக் கிடைக்கும்?'' என ஒவ்வொரு தனி மனிதனும் எண்ணுவதால் அனைவருமே துன்புறுகின்றனர். ''பிறருக்கு இன்பம் எப்படிக் கிடைக்கும்?'' என எண்ணத் தொடங்கினால் எல்லோருமே இன்பம் பெறுவர். 797

துன்பமே வேண்டாம் என்றால் உலகாயத இன்பத்தைப் புறக்கணித்து விடு. 798

'பிறர் இன்புற வேண்டும்' என்ற மனோபாவம் தான் உள்ளிட்ட அனைவருக்குமே இன்பம் பயக்கும். ''நான் இன்புற வேண்டும்'' என்ற எண்ணப்பாங்கு தான் உள்ளிட்ட அனைவருக்குமே துன்பம் தரும். 799

உலக இன்பம் ஏன் நிலைப்பதில்லை? ஏனெனில் அது நமதோ, நமக்காகவோ ஏற்பட்டது அன்று. 800

இன்பம் நல்லதாகத் தெரிகிறது. அதன் விளைவு நன்றாக இல்லை. துன்பம் தீயதாகத் தெரிகிறது. அதன் விளைவோ நன்றாக அமைகிறது. 801

துயர்தரும் சூழ்நிலை எம்பெருமான் திருவுள்ளப்படி நமது உய்வுக்காகவே வந்தமைகிறது. அதை விலக்க முயற்சி செய்யாமல் அமைதியாகப் பொறுத்துக் கொள்ள வேண்டும். 802

**பிறருக்கு வேண்டாததைச் செய்பவன் உண்மையில் தனக்கே தகாததைச் செய்து கொள்கிறான். பிறருக்கு இன்பம் தருபவன் உண்மையில் தனக்கே நன்மை செய்து கொள்கிறான்.** 803

துயரம் நேருங்கால் மகிழ்ச்சி கொள்வது மிக உயர்ந்த ஸாதனை. 804

நிகழ்ந்துவிடும் சூழ்நிலையைத் தவிர்ப்பதற்கு மனிதன் திறமையற்றவன். ஆனால் அவற்றின் விளைவான இன்ப துன்பங்களைக் கடந்து பாதிப்புறாமல் நிற்பதில் எப்போதும் திறமை படைத்தவன், வலிமை படைத்தவன். 805

சூழ்நிலையால் பாதிக்கப்படும்வரை, கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் ஆகிய எந்த யோகமும் ஸித்திக்காது. 806

உலகம் யாருக்கும், எப்போதும், துயர் தருவதில்லை. அதனுடன் ஏறபடுத்திக் கொள்ளும் தொடர்பே துன்பம் தருகிறது. 807

உலக சுகத்தால், துன்பம் நீங்காது. - இது நியதி. 808

உலகப் பொருள் கிடைத்தால் தீராத ஆசையும் (த்ருஷ்ணை), துன்பமும்; பரமாத்மா கிடைத்தால் ப்ரேமையும், ஆனந்தமும். 809

துன்புறுபவன் பின்னர் இன்பம் பெறலாம். துன்பம் விளைவிப்பவன் சுகம் பெறவே முடியாது. 810

சுகம் பெறும் நோக்கத்தில் பிறருடன் தொடர்பு கொள்ளாதவன் வாழ்ந்தாலும் ஆனந்தமாகவே வாழ்கிறான். மடிந்தாலும் ஆனந்தமாகவே மடிகிறான். தன்னலத்துக்காகத் தொடர்பு கொள்பவன் துயரத்துடனேயே வாழ்ந்து, துயருற்றே மடிகிறான். 811

மனிதனுக்கு நீர் வேட்கை துன்பம் தருகிறது. தண்ணீர் துயர் தருவதில்லை. உலகின் இன்பநாட்டம் துன்பம் தரும். உலகம் துயர் தருவதில்லை. 812

# தொண்டு (பிறர் நலம்)

பிறருக்குத் தீமை செய்வதால் தனக்கே தீங்கு நேரும். நன்மை செய்வதால் தனக்கே நலன் விளையும். - இது நியதி. 813

உலகின் தொடர்பு 'கடன்' ஆகும். அந்தச் செஞ்சோற்றுக்கடன் தீர்வதற்கான வழி. - அனைவருக்கும் தொண்டு புரிதல்; யாரிடமும், எதையும் எதிர்பாராதிருத்தல். 814

ஸாதகன் பரமாத்மாவை ஸகுணமாக அடைய விரும்பினாலும், நிர்குணமாக அடைய விரும்பினாலும், எல்லா உயிரினங்களுக்கும் நலன் செய்வதில் இன்புற வேண்டும். இது மிக மிக அவசியம். 815

உலகின் தொண்டுக்காக மட்டுமே ஸாதகன் உலகில் இருக்க வேண்டும். தனது இன்பத்துக்காக அன்று. 816

உள்ளார்ந்த அன்புடன் பகவானுக்குப் பணிபுரியும் ஸாதகன் எல்லா உயிரினங்களுக்கும் தொண்டு செய்கிறான். ஏனெனில் அனைத்துக்கும் ஆதாரம், மூலம் பகவானே. 817

ஸாதகன் தனக்கு நேரும் பெருந் துன்பங்களையும் பொறுத்துக் கொள்ள வேண்டும். பிறருக்கு நேரும் மிகச் சிறிய துன்பத்தையும் பொறுத்துக் கொள்ளக்கூடாது. 818

பிறருக்கு இன்பம் தரும் ஆசையினால், தனது ஆசைகள் விலகிச் செல்கின்றன. 819

யாருக்கும் எள்ளளவும் துன்பம் நேரக்கூடாது - இந்த மனப்பான்மையே மிகச் சிறந்த வழிபாடு. 820

அலுவலகம் செல்பவன் அதற்கான பணிகளையே செய்வதுபோல், உலகில் வாழ்பவன் உலகுக்காகவே பணிசெய்ய வேண்டும், தனக்காக அன்று. இதனால் எளிதாக

உலகின் தொடர்பு விலகி, நித்ய ப்ராப்தரான பரமாத்மாவையும் உணரமுடியும். 821

நேரம், அறிவு, பொருட்கள், திறமை - இந்நான்கையும் தனதென்று எண்ணுவது இவற்றைத் தவறாக பயன்படுத்துவது ஆகும். பிறர் நலனுக்காக ஈடுபடுத்துவது இவற்றின் சீரிய பயன்பாடாகும். 822

உலகியல் தொடர்பால் விளையும் இன்பங்களில் ஏற்படும் மகிழ்ச்சி, பிறர் நலம் பேணுவதில் ஏற்பட்டால் உய்வு பெறுவதில் சந்தேகம் இல்லை. 823

நமக்குக் கிடைத்துள்ள வாய்ப்பு-வசதிகள் அனைத்தும் உலகிற்குத் தொண்டு புரிவதற்காகவே. 824

மனிதப்பிறவி தான் சுகபோகங்களை அனுபவிப்பதற்காக அன்று; பிறர் நலனுக்காகத் தொண்டு புரிவதற்கே. 825

ஜீவராசிகள், மனிதர், ரிஷி-முனிவர், ஸாது-மஹாத்மாக்கள், தேவர், தென்புலத்தார், பூதம், பிரேதம் இவர்கள் யாவருக்குமே தொண்டுபுரியும் அரியதொரு தகுதியை பகவான் மனிதனுக்கு நல்கியுள்ளார். இதற்கும் மேலாக, ஸாக்ஷாத் பகவானுக்கே அவன் பணிபுரிய இயலும். 826

உலகுக்குத் தொண்டு புரியாமல் செயல் புரிவதில் உள்ள பற்று நீங்காது. 827

ஒரு நிறுவனத்தில் சிறந்தமுறையில் பணிபுரிவதால் அதன் உரிமையாளர் மகிழ்வுறுவது போன்று, உலகிற்குத் தொண்டு புரிவதால் அதன் உரிமையாளரான பகவான் மகிழ்ச்சியடைவார். 828

தாயிடம் உள்ள பால் அவளுக்காக அன்று, குழந்தைக்காகவே. அதுபோன்றே ஒருவனிடம் உள்ள பொருட்கள் மற்றவர்க்கானவை. 829

போகி போகங்களிலும், மோஹமுள்ளவன் குடும்பத்திலும், கருமி பணத்திலும் பற்று வைப்பதுபோல் மேலோர் உயிரினங்களின் நன்மையில் பற்றுடையவர்கள். 830

மனிதர்களுக்குத் தொண்டு செய்வதும், பொருட்களை நன்முறையில் பயன்படுத்துவதும் அவசியம். 831

பிறர்நலத்துக்காகத் தொண்டாற்றுவதாலேயே கர்மங்களின் பெருக்கு உலகின் பக்கம் சென்று விடுகிறது. இதனால் ஸாதகன் கர்மபந்தத்திலிருந்து வெகு எளிதாக விடுபட்டு விடுகிறான். 832

எப்பொழுதும், எங்கும் நிறைந்த பரிபூரண பரமாத்ம தத்வத்துடன் இடையறாத அனுபவம் பெற விழைபவன் உயிரினங்களின் நலனில் ஈடுபாடு கொள்ள வேண்டும். 833

ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் ஆகிய மூவகை சரீரங்களாலும் செய்யப்படும் தல யாத்திரை, விரதம், தவம், தானம், த்யானம், ஸமாதி ஆகிய எல்லா சுப கர்மங்களும் ஸகாம பாவத்துடன் அதாவது தனக்காகச் செய்யப்பட்டால் 'பரதர்மம்' ஆகும். நிஷ்காம பாவத்துடன், பிறருக்காகச் செய்யப்பட்டால், 'ஸ்வதர்மம்' ஆகும். 834

ஒருபொருள் சிறந்த முறையில் பயனாவது - அதைப் பிறர் நலத்தில் ஈடுபடுத்தும்போதுதான். 835

பிறர் நலத்தில் ஈடுபடுபவனே உயர்ந்த மனிதன், சான்றாண்மை மிக்கவன். 836

தனது வாழ்க்கை தனக்காவன்று; பிறர் நலனுக்காகவே. 837

பிறர் துயரத்தில் துயரம் கொள்வதே தொண்டிற்கான ஆரம்பம், ஆணி வேர். 838

தொண்டு செய்வது சமுதாயப்பணி; தன்னில் தீமை களைவது உலகப் பணி; ஆசைகளைத் துறப்பது தனது மேன்மைக்காக; பகவானிடம் ப்ரேமை கொள்வது (அநந்ய பக்தி) அவருக்குச் செய்யும் தொண்டு. 839

உண்மையான உள்ளத்துடன் பகவானை நாடுபவன் மூலம் இயல்பாகவே பிறருக்கு நன்மை விளைகிறது. 840

உலகில் கிடைக்கும் பொருட்களனைத்தும் உலகப் பணிக்காக மட்டுமே, வேறெதற்கும் அல்ல. 841

எந்த ஒரு பொருள் நமக்கு உயர்ந்ததாகத் தோன்றினாலும் அது நமது போகத்திற்காக அன்று, பிறர்தம் பணிக்காகவே. 842

மனிதன் ஒரு செயலில் இறங்கினால் அது தனக்கும் நலம் பயக்கவேண்டும், உலகுக்கும் நலம் தர வேண்டும்; தற்போதும் நலம் தர வேண்டும்; எதிர் காலத்திலும் நலன் விளைய வேண்டும். 843

உடலுக்குப் பணிசெய்வதால் உலகுடனான தொடர்பு வலிமை பெறும்; (பகவானின் உகப்புக்காக) உலகுக்குத் தொண்டு செய்வதால் பகவானுடனான தொடர்பு வலிமை பெறும். 844

உள்ளத்தில் பிறர்நலனுக்கான எண்ணம் கொள்பவன், பகவானின் திருஉள்ளத்தில் இடம் பெறுகிறான். 845

மறுமை சீர் கெடவில்லை. உலகியல் விவகாரமே சீர் கெட்டுள்ளது. ஆகவே அதைச் சீர்படுத்த வேண்டும். தன்னலமும், செருக்கும் அழிவுற்றுப் பிறர்நலம் பேணுவதால் உலகியல் சீர்மை பெறும். 846

பிறர் நலம் பேணும் மனப்பான்மையுள்ளவன் எங்கிருந்தாலும் அங்கேயே பகவானைப் பெற்றுவிடலாம். 847

பகவானிடம் ஈடுபடுவதற்காக உலகை அசட்டை செய்ய வேண்டும்; உலகியல் மோஹம் அழிவதற்காகப் பயன் கருதாமல் பிறர்க்குத் தொண்டு செய்ய வேண்டும். 848

பணிபுரியும் நோக்கத்தோடு பொருட்களைப் பெற விழைவதும் தவறுதான்; கிடைத்த பொருட்களைத் தொண்டிற்காகப் பயன்படுத்தவே நமக்கு அதிகாரம் உள்ளது. 849

உலகில் நாம் பிறருக்கு என்ன செய்கிறோமோ, அதையே பின்னர் நாமும் பெறுகிறோம். ஆகவே எப்பொழுதும் பிறருக்கு நன்மையே செய்ய வேண்டும். 850

தன்னலமும், செருக்கும் துறந்து, பிறர் நலனில் நாட்டம் கொண்டு வாழ்பவரே உண்மையில் வாழ்கின்றனர். 851

பிறர் தொண்டில் வாழ விரும்புபவனுக்கு இது மோசமான நேரம்; பிறர்க்குத் தொண்டு செய்து வாழ்பவனுக்கு இது மிகவும் நல்ல சமயம். 852

நமது எந்த ஒரு செயலாலும், யாருக்கும் கடுகளவும் கூடத் துன்பம் நேரக்கூடாது. - இந்த மனப்பான்மையே 'தொண்டு'. 853

தன்னலங் கருதாது பிறர்க்குப் பணி புரிவதால், உலகியல் விவகாரமும் சீர்மை பெறும்; 'தனது' என்ற எண்ணமும் (மமதா) அழிவுறும். 854

உற்றாருக்குப் பணிபுரிவதால் மோஹம் தோன்றுவதில்லை; ஏதோ ஒன்றைப் பெற விழைவதாலேயே மோஹம் ஏற்படுகிறது. 855

பகவானை அடைவதால் ஒருவன் உலகுக்கு எவ்வளவு உதவ முடியுமோ, அவ்வளவு தானத்தாலோ, அறச் செயல்களாலோ முடியாது. 856

நம்மை வெறுப்பவருக்குப் பணிசெய்வதால், மிகுந்த நன்மை விளையும்; ஏனெனில் அங்கு தொண்டினால் பெறும் இன்பம் தோன்ற வாய்ப்பில்லை. 857

தொண்டிற்கான வாய்ப்புக் கிடைத்துவிட்டால் பெறும் பேறு கிடைத்துவிட்டதாகக் களிபேருவகை கொள்ள வேண்டும். 858

எல்லா உயிர்களுக்குமான நன்மை வேறு, தனது நலன் வேறு என்று எண்ணிவிட்டால் 'நான்' என்பது ஏற்பட்டு விடுகிறது. இது ஸாதகனுக்கு எதிர்காலத்தில் தடையை ஏற்படுத்தும். ஆகவே ஸாதகன் ஒவ்வொரு செயலையும் உலக நலனுக்காகவே செய்யவேண்டும். 859

## இயல்பு

தன்னலம், செருக்கு இவ்விரண்டினாலும் ஒருவனது இயல்பு சீர் கெடுகிறது. ஆகவே ஸாதகன் இவ்விரண்டையும் முற்றிலுமாக ஒழித்துவிட வேண்டும். 860

இயல்பு தூய்மை பெறாமல் வழிபாடு, த்யானம் இவை உடனடியாகவும், கண்கூடாகவும் பயன் தரா. இதனால் ஸாதகன் தனது இயல்பைச் சீர் செய்து கொள்வதில் தனித்த கவனம் செலுத்த வேண்டும். 861

தனது இயல்பைத் தூய்மை செய்வது போன்ற ஒரு உயர்வு தரும் செயல் பிறிதொன்றும் இல்லை. 862

இயல்பு சீர் திருந்தினால், ஒருவனுக்கு உலகும் சீர்மையுடன் காணப்படும். 863

பிறருக்குத் தீங்கு செய்யும் இயல்புடையவன் பிறரையும் துன்புறுத்துகிறான்; தானும் துன்புறுகிறான். பிறருக்கு நன்மை செய்யும் இயல்புடையவன் பிறருக்கும் இன்பமளித்துத் தானும் இன்புறுகிறான். 864

ஒருவன் தனதியல்பைத் தானே தான் சீர்படுத்திக் கொள்ள இயலும். பிறர் வழிகூற முடியும்; துணைபுரிய முடியும். அவ்வளவுதான். 865

நம்மைப் பொறுத்தவரை நியாயமாக நடந்து கொண்டு, அதாவது நம்மை நாமே ஆண்டு, பிறரை மன்னிக்கும் போதுதான் நமது இயல்பு சீர்மை பெறும். 866

ஸத் ஸங்கம், ஸத் சாஸ்த்ரம், ஸத் விசாரம் (அடியாரிணக்கம், அற நூல்கள், ஆய்வு) இம் மூன்றும் ஒருவனது இயல்பைச் சீர்படுத்தும். 867

இயல்பு தூய்மையாகப் பெற்றவன், தாழ்ந்த கதிக்குச் செல்ல மாட்டான். 868

'அப்புறம் செய்து கொள்ளலாம்' - இது பெரும் வீழ்ச்சியைத் தரும் விஷயம்; இந்த இயல்பு படைத்தவன் உய்வு பெறுவது மிகவும் கடினம். 869

## ஸ்வரூபம் (ஆத்மா)

மாறி வரும் நிலைகளைப் பார்க்காமல், ஒருபோதும் மாறாதிருக்கும் ஸ்வரூபத்தை (தன்னை) ஸாதகன் பார்க்க வேண்டும். 870

பயன் கருதாதது (நிஷ்காமம்) ஸ்வரூபத்தின் நிலைப்பாடு. ப்ரக்ருதியின் தொடர்பினால் பயன்கருதும் மனப்பான்மை (ஸகாம பாவம்) ஏற்படுகிறது. 871

சரீரம் முதலிய பொருட்களனைத்தும் மாறுதலடைகின்றன - இந்த அனுபவத்தைப் பெறும் 'ஸ்வயம்' (நான்) ஒரு பொழுதும் மாறுதலுறுவதில்லை. ஆகவே 'ஸ்வயம்' - ஆத்மா மாறுதலடைகிறது என்று யாரும் உணர்வதாகவோ, கூறுவதாகவோ ஏற்படவில்லை. 872

ஜீவன் ஸ்வரூபத்தில் செயலற்றவன் (அகர்த்தா). இன்ப, துன்பங்களற்றவன். மதிமயக்கத்தால் செயலாற்றுபவனா கிறான். செயல்களின் பயனில் தொடர்பு கொண்டு இன்ப, துன்பங்களால் பாதிப்படைகிறான். 873

செயல்களுடனும், பொருட்களுடனும் தொடர்பை ஏற்படுத்திக் கொள்வதால் தனது ஸ்வரூபத்தின் நேரடியான அனுபவம் ஏற்படுவதில்லை. 874

நமது உடல் உலகில் உள்ளது; நாமோ பரமாத்மாவில் உள்ளோம். 875

நமது ஸ்வரூபம் என்பது இருப்பே (ஸத்தா); 'நான்' இல்லை. ஆகவே 'நான்' என்பதை விடுத்து ஸத்தையில் உனது இயல்பான நிலையை உணர்ந்துகொள். 876

நமது ஸ்வரூபம் நமதேயானது; பிறருடையது அன்று. இதை அறிவது கடினம் என்றால், பின் எளிது என்பது எது? 877

நமது இருப்பு (ஸத்தா) - நபர், பொருள், செயல் இவற்றைச் சார்ந்ததன்று. 878

நமது ஸ்வரூபம் இருப்பு மட்டுமே (ஸத்தாமாத்ரம்). இதில் ஏதேனுமொன்றைக் கலப்பது அஞ்ஞானம்; பந்தம். 879

நமது இருப்பு (ஸத்தா) உடலைச் சார்ந்ததன்று. மாறாக உடலின் இருப்பு நம்மைச் சார்ந்தது. அதாவது நாம் உடலின்றி இருக்கலாம்; ஆனால் உடல் நாம் (ஆத்மா) இன்றி இருக்க முடியாது. 880

## ஸாதகனின் கவனத்திற்கு

**'நான் இங்கு வாழ்பவன் அல்லன். பகவானின் அம்சமானதால் பரமபதத்தில் வாழ்பவன்' என்ற உள்ளுணர்வு கணந்தோறும் ஸாதகனுக்கு இருத்தல் வேண்டும். 881**

ஒருவன் ஈட்டிய அவனது உடமைகளின் ஒரு சிறு துகளும் அவனுடன் கூட வராது - இதைக் கவனத்துடன் நினைவு கொள்ள வேண்டும். 882

எல்லைக்குட்பட்ட சேதனம், ஜடத்துடன் தாதாத்ம்யம் - ஒன்றிய நிலை பெறும்போது, 'நான்' எனும் உணர்வு தோன்றுகிறது. பின்னர் அதிலிருந்து 'எனது' தோன்று கிறது. இதனால் மாறுதல் ஏற்படுகின்றது. 'எனது' என்பதிலிருந்து 'ஆசை' தோன்றுகிறது. விளைவு அமைதியின்மை தான். 883

ஸாதகன் தான் செய்யும் எந்த ஒரு செயலையும் பகவானது வழிபாடாகவும், எந்த ஒரு நிகழ்வையும் அவர்தம் திருவிளையாடலாகவும் கருத வேண்டும். 884

தற்போது மனிதன் விலங்கினும் தாழ்ந்தவனாகி வருகிறான். விலங்கு தனது தேவைக்கானதை மட்டுமே பயன்படுத்திக் கொள்கிறது. பிறர் உரிமையில் கைவைப்பதில்லை. மனிதனோ பிறர் உரிமையில் கைவைத்து அதையும் கவர்கிறான். 885

மனிதனது உடலின் தேவைக்கான ஏற்பாடுகள் பரமாத்மாவைச் சார்ந்தவை. ஆனால் அவனது பேராசையைப் பூர்த்தி செய்ய எவ்வித ஏற்பாடும் கிடையாது. 886

ஸாதகன் தன்னிடமுள்ள குற்றம் குறைகளின் தீமையை உணர்ந்து துயர் கொள்வதாலும், அவை தன்னில் இருப்பதைப் பொறுக்காததாலும் அக்குற்றங்கள் அவனிடம் தங்கி இருப்பதில்லை. பகவானின் கருணையால் அக்குறைகள் விரைவிலேயே அழிந்து விடுகின்றன. 887

கண்களைக் காட்டிலும் மனத்திற்கு நினைவாற்றல் அதிகம். மனத்தைக் காட்டிலும் புத்திக்கு நினைவாற்றல் அதிகம்.

அதைக் காட்டிலும் ஆற்றல் மிக்கது 'ஸ்வயம்' (ஆத்மா). அது எதைப் பற்றுகிறதோ, அதைக் கணந்தோறும் நினைவு கொள்கிறது. 888

தத்தம் இடங்கள், பகுதிகளில் புகழ் பெற்ற ஆசிரியர், சொற்பொழிவாளர், தலைவர், துறவியர், மடாதிபதிகள், பூஜாரிகள் ஆகியோர் தமது நடவடிக்கைகளில் (ஒழுக்கம்) மிகவும் கவனமாக இருக்கவேண்டும். (அவை முன்மாதிரியாக அமைய வேண்டும்) அவற்றின் தாக்கத்தால் ஏனையோரும் நல்ல மாறுதல் பெறுவர். 889

செய்ய விரும்பினால் தொண்டு செய்; அறிய விரும்பினால் தன்னை அறிந்து கொள்; ஏற்றுக் கொள்ள விரும்பினால் பகவானை ஏற்றுக் கொள். மூன்றின் விளைவும் ஒன்றே. 890

எழுதுகோல் தரமானதாக இருந்தால் கை எழுத்து அழகாக இருக்கும்; அதனால் எழுதுபவன் உயர்ந்தவன் ஆவதில்லை. அந்தக்கரணம் தூய்மை பெற்றால் செயல்பாடுகள் தூய்மை பெறும்; செய்பவன் தூய்மை பெறமாட்டான். 891

மற்றவர் நம்மை எத்தனை தூரம் நல்லவர் எனக் கருதுகிறாரோ, நாம் உண்மையில் அந்த அளவு நல்லவர் அல்லர். நம்மிடம் உள்ள குற்றங்குறைகளோ நம் மதிப்பிடும் அளவைக் காட்டிலும் உண்மையில் அதிகமானவை. ஆகவே ''உலகம் நம்மை நல்லவராகக் கருதவேண்டும்'' என்ற ஆசையைத் துறந்து, நம்மளவில் தூய நடவடிக்கைகளைக் கைக் கொள்ள முயலவேண்டும். 892

தொடர்பால் விளையும் சுகத்தின் மீதான இச்சை எவ்வளவு தீயதோ அவ்வளவு சுகம் தீயதன்று. 'உடல் நிலைக்க வேண்டும்' என்ற பாவனை எவ்வளவு தீயதோ அவ்வளவு உடல் தீயதன்று. குடும்பத்தில் பாசம்-மோஹம் எத்தனை

தீயதோ அத்தனை குடும்பம் தீயதன்று. பணத்தின் பேராசை எத்தனை தீயதோ அத்தனை பணம் தீயதன்று. 893

புலப்படும் உலகைத் தனதென்று கருதாமல் அதற்குத் தொண்டு புரிய வேண்டும். புலப்படாத பகவானைத் தம்முடையவராக ஏற்றுக் கொண்டு அவரைச் சிந்தனை செய்ய வேண்டும். 894

கிடைத்துள்ள உலகை (பொருட்களை, நேரத்தை) வீணாக்காதே. அறிந்து கொண்ட தத்வ விஷயங்களை அசட்டை செய்யாதே. ஏற்றுக் கொண்ட பரமாத்மாவில் ஐயம் கொள்ளாதே. 895

நமது உள்ளத்தில் ஜடத்திற்கு (உலகம் - உடல்) அளிக்கும் மதிப்பு பகவானுக்கு இல்லை. அந்த அவமதிப்பு நமக்கு அதோகதியைத் தரும். 896

அழியும் பொருட்களைப் பற்றிய உயர்வான எண்ணம் மனிதனை வழிதவறச் செய்கிறது. பரமாத்மாவைப் பற்றிய உயர்வான எண்ணம் அவனை உயர்வடையச் செய்கிறது. 897

கிடைத்த பொருள், நேரம், நபா இவற்றைத் தவறாகப் பயன்படுத்தினால் பின்னர் இவை கிடைக்காமல் வஞ்சிக்கப்பட்டுத் துயருற நேரும். 898

எது நமதோ அது எப்போதும் நமதேயானது. ஏதோ ஒரு சமயம் நமதின்றிப் போனால் அது ஒரு காலும் நமதாக முடியாது. 899

எது அனைவருக்குமானதோ அது நமதாக முடியும். எந்த ஒன்று, ஏதோ ஒரு சமயம், யாருக்காவது கிடைக்கவில்லையோ அது ஒருபோதும் நமக்கானதாக இயலாது. 900

எந்த ஒரு பொருள், நபர் இவற்றில் ஒரு ஸாதகன் ஈர்ப்பை உணர்ந்தாலும், அதில் அவன் பகவத் ஸ்வரூபத்தை சிந்தனம் செய்ய வேண்டும். 901

எங்கும் பரமாத்மாவைப் பார்ப்பது ''ஸம தர்சனம்''; இதற்கு முரணாக எங்கும் ப்ரக்ருதியையும், அதன் செயல்பாட்டையும் (சரீரம்-ஸம்ஸாரம்) பார்ப்பது ''விஷம தர்சனம்''. 902

''பகவான் உலகிற்கு உரிமையாளர். நான் எனது உடலுக்கு உரிமையாளன்'' என நினைப்பது தவறு. யார் உலகிற்கு உரிமையாளரோ, அவரே உடலுக்கும் உரிமையாளர். 903

ஸாதகன் தனக்கென ஒரு ஸங்கல்பமும் வைத்துக் கொள்ளக்கூடாது. பகவானது ஸங்கல்பத்துடன் தனது ஸங்கல்பத்தை இணைத்து விடவேண்டும். பகவானது நியதியில் மகிழ்வுற வேண்டும். 904

ஸாதகன் தன்னால் பிறருக்கு யாதொரு சிறு துன்பமோ, தீங்கோ நேராதவாறு மிகுந்த கவனத்துடன் இருக்க வேண்டும். 905

''நான் நினைப்பதை நிறைவேற்றாதவரிடம் சினம் கொள்ள மாட்டேன்'' என்று ஸாதகன் உறுதி பூணவேண்டும். 906

சிறுகுழந்தை எப்போதும் தாயையே அழைப்பதுபோல் நாம் ஒவ்வொரு நிலையிலும் பகவானையே அழைக்க வேண்டும். 907

நேர்மையுடன் செயலாற்றுபவரின் சித்தத்தில் அமைதியும், நேர்மையற்றவனது மனத்தில் அமைதியின்மையும் குடிகொள்கின்றன. 908

எந்த ஒரு செயலால் தனக்கும், பிறருக்கும் நிகழ்காலத்திலும், எதிர்காலத்திலும் தீங்கு நேருமோ அது 'அஸத் கர்மம்' ஆகும். 909

உலகில் நம்முடைய அதிகாரத்திற்கு உட்பட்ட, நமக்குக் கிடைத்த உடைமைகளே நம்மிடம் நிலைத்திருப்பதில்லை என்னும்போது நமக்கு உரிமையற்ற, கிடைக்காத பொருள் மீது ஆசை கொள்வதால் என்ன பயன்? 910

அறிந்து கொள்ள வேண்டுமானால் அழிவற்றதை அறிந்து கொள். அழிவதை அறிவதால் என்ன லாபம்? 911

"நமக்கு எதனால் நன்மையோ, நாம் எதைச் செய்ய முடியுமோ, அதை நாம் ஏன் செய்வதில்லை?" இதை நன்கு ஆராய்ந்து பார். 912

செல்பவனைச் செல்பவனாக அறிந்து கொள்ள வேண்டும்; இருப்பவனை இருப்பவனாக அறிந்து கொள்ள வேண்டும். இதுவே மெய்யறிவு. 913

பின்னால் சீர் செய்ய இயலாத எந்த ஒரு செயலையும் செய்யக்கூடாது. 914

ஒவ்வொரு சூழ்நிலையும் பகவானின் திருவிளையாடலே. அதில் ஆழ்ந்து பரவசமாகக் களிப்புடன் இருக்க வேண்டும். 915

த்வைதம் என்பதும், அத்வைதம் என்பதும் ஒருவகை நம்பிக்கைதான். தத்வத்தில் த்வைதமும் கிடையாது; அத்வைதமும் கிடையாது. 916

நாம் ஒரு குற்றமும் செய்யாதபோது, நமது செயல் சரியானதாக இருக்கும் போது அஞ்சத் தேவையில்லை. அச்சம் தோன்றினால் எங்கோ, எதிலோ நம்மிடம் குறைபாடு உள்ளதாகவும், நமது நேர்மையின்பால் உள்ள நம்பிக்கையில் குறைபாடு உள்ளதாகவும், அறிந்து கொள்ள வேண்டும். 917

ஒவ்வொரு செயலைத் துவங்கும்போதும் நாம் இச் செயலை ஏன் செய்கிறோம் என்று ஆராய்ந்தறிந்து கொள்ள வேண்டும். 918

சரி - தவறு என்பது நமது கண்ணோட்டத்தில் தோன்றுவது. பகவானது கண்ணோட்டத்தில் எல்லாமே சரியானவை தாம். தவறு என்பதே இல்லை. 919

பிறர் நம்மிடம் குணத்தைப் பார்த்தால் அது அவரது மேன்மையையும், பரந்த மனப்பான்மையையும் காட்டுகிறது. அக்குணங்கள் நம்மிடம் உண்மையிலேயே இருப்பதாக நாம் கருதுவது பிறர்தம் மேன்மையையும், பரந்த மனப்பான்மையையும் குறைவுபடுத்துவதாகும். 920

வித்யை பெறுவதற்கான மேலான வழி குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிவதும், அவரை மகிழ்வுறச் செய்வதுமாகும். அவர் பெறும் மனநிறைவினால் நாம் பெறும் வித்யை, நமது முயற்சியினால் கிடைக்காது. 921

பகவானை அழைப்பதால் கிடைக்கும் பயன், விவேக - விசாரங்களால் கிடைக்காது. 922

பகவானைப் பெறமுடியாததால் தோன்றும் துயரம், ஆயிரம் உலகியல் சுக-போகங்களைக் காட்டிலும் உயர்வானது. 923

மருத்துவர் தரும் மருந்தால் நன்மை விளைவது போல் பகவானின் எந்த ஒரு நியதியிலும் நமது மேலான நன்மையே உள்ளது. 924

பசுவின் உடலில் உள்ள பாலால் (கறப்பதற்கு முன்) பயனில்லை. அதுபோன்றே கற்றுக்கொண்ட அறிவினாலும் பயனில்லை. (பட்டறிவு - அனுபவ அறிவே உயர்ந்தது) 925

'நான் ஞானி', 'நான் அஞ்ஞானி' என்ற இரு கருத்துக்களும் அஞ்ஞானிகளிடமே உள்ளன. 926

ஒழுக்கத்தின் அழகே உண்மை அழகு. 927

நினைத்தால் பகவானை நினைக்க வேண்டும். செய்தால் தொண்டு செய்ய வேண்டும். 928

உண்மைகளை ஏற்றுக் கொள்வதே மனித தர்மம். 929

ஒவ்வொரு நபரும் தானே சீர்திருந்தி விட்டால், சமுதாயம் முழுவதும் சீர்பெற்று விடும். 930

தன் மக்களால் மகிழ்வுற விரும்புபவன் தன் தாய்-தந்தையரை மகிழ்வுறச் செய்ய வேண்டும். 931

பிறர்க்குத் தீங்கு செய்யும் எண்ணம், தனக்கே தீமைவிளைவதற்கு அழைப்பு விடுப்பதாகும். 932

பகவானது ஒவ்வொரு நியதியும் நமது நலனுக்காகவே - இதை நினைவில் கொள். 933

எந்த ஒரு விஷயத்திலும் தன்னிடத்தில் தனித்தன்மை தென்பட்டால் அது உண்மையில் பராதீனத்தைத் (சார்ந்து நிற்கும் நிலையை) தோற்றுவிக்கும். 934

கடைசியில் தனித்தே செல்லவேண்டும். ஆகவே முதலிலேயே தனியாகி விடவேண்டும். அதாவது பொருள், நபர், செயல்களிடம் தொடர்பு கொள்வதையும், சார்ந்திருப்பதையும் தவிர்த்து விடவேண்டும். 935

கடைப்பிடிக்க வேண்டியவையில் முதன்மையானது - பகவானை நினைவு கூர்வது. துறக்க வேண்டியவற்றில் முதன்மையானது - ஆசைகளைத் துறத்தல் 936

''மகிழ்ச்சி'' ஸமுதாய சீர்திருத்தத்தின் மூலமந்திரம். 937

ஒருமைப்பாட்டில் வேற்றுமையும், வேற்றுமையில் ஒற்றுமையும் ஹிந்து தர்மத்தின் தனிச்சிறப்பு. 938

பொய்ம்மையைச் சார்ந்திருக்கும் ஒருவன் நமக்குத் தீங்கிழைக்க முடியாது. 939

உலகில் பகவத்பக்திக்கு நிகரான விலையுயர்ந்த பொருள் வேறொன்றுமில்லை. 940

சூழ்நிலையை மாற்றுவதற்கான முயற்சி பயனின்றிப் போய்விடும். ஆனால் அதை நல்லமுறையில் பயன்படுத்துவதற்கான முயற்சி பயனளித்துவிடும். 941

தேவைகளை எவ்வளவுக்கெவ்வளவு ஒருவன் வளர்த்துக் கொள்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு அவற்றுக்கு அடிமையாகிறான். 942

பகவானால் அளிக்கப்பட்ட பொருட்கள் வேண்டியவை யாகின்றன; ஆனால் பகவான் வேண்டாதவராகிறார். இது வியப்புக்குரிய விஷயம். 943

உலகின் கண்களுக்கு நாம் நல்லவராயினும், கெட்டவராயினும் நமது மனோபாவம் தூயதாக இருப்பின் மனமகிழ்ச்சியும் கிட்டும்; நல்ல கதியும் அமையும். 944

தீய விளைவுகள் மனத்தில் தோன்றும்போது, இக்கணமே மரணம் நேர்ந்தால் நம் கதி என்ன எனச் சிந்தித்துக் கவனமாக இருக்க வேண்டும். எப்போதுமே பகவானின் சிந்தனையே அமைந்துவிட்டால், எப்போது மரணம் வந்தாலும் கவலை இல்லை. 945

தனிமனித ஒழுக்கம் சீர்கெட்டால் சமுதாயம் சீர் கெடுகிறது; தனிமனித ஒழுக்கம் சீர்பெற்றால் சமுதாயம் சீர் பெறுகிறது. ஏனெனில் சமுதாயம் மனிதர்களால் உருவாவது. 946

பகவானின் பிரிவால் தோன்றும் பிரிவுத்துயர், உலகியல் இன்பங்களைக் காட்டிலும் மிகுந்த இன்பம் தரும். 947

பகவான், மெய்நூல்கள், பெரியோர், உலகம் இவற்றுக்கு அஞ்சுபவன், உண்மையில் அச்சம் நீங்கியவனாகிறான். 948

எப்போதுமே தனித்த பொருள்தான் நம்மிடமிருந்து விலகிச் செல்லும்; நித்யமான பொருள்தான் கிடைக்கும். 949

பிறர் மகிழ்ச்சியுடன் தரும்பொருள் பாலுக்கு நிகரானது; பிறரிடம் கேட்டுப் பெறும் பொருள் நீருக்கு நிகர்; பிறரை வருத்திப் பெறும் பொருள் ரத்தத்துக்கு நிகரானது. 950

செய்யும் தவற்றுக்குக் கவலையோ கழிவிரக்கமோ கொள்ளாமல் மேலும் தவறு நேராமல் கவனத்துடன் இருக்க வேண்டும். 951

அழியும் பொருள் ஒரு கணமும் நிலையாகத் தங்காது. 952

தன்னில் ஒரு தனித்தன்மையைக் காண்பது பெருமிதம் - செருக்கு இவை காரணமாக ஏற்படுவது. 953

பொருட்களின் துணையின்றியும் நாம் இருக்க முடியும். எவற்றின் துணை தேவையில்லையோ அவற்றுக்கு நாம் ஏன் அடிமையாக வேண்டும்? 954

சரீரம் அண்மையிலுள்ளதாகவும், பரம்பொருள் தொலைவில் உள்ளதாகவும் தென்படுகின்றன. இது அஞ்ஞானம். உண்மையில் சரீரம் எப்போதும் கிடைக்கப் பெறாதது, பரமாத்மா எப்போதும் கிடைக்கப் பெற்றவர். சரீரத்துடன் நமக்கு ஒருகாலும் சேர்க்கை ஏற்படாது; பரமாத்மாவுடன் ஒருகாலும் பிரிவு ஏற்படாது. 955

சரீரத்தை உலகிலிருந்தும், தன்னைப் பரமாத்மாவிலிருந்தும் வேறாகக் கருதுவது தவறு. 956

ஒரு தர்மாத்மாவுக்கு யாரும் தேவையில்லை; ஆனால் உலகுக்கு அந்த தர்மாத்மா தேவையாகிறார். 957

ஒருவன் தனது விவேகத்தை அசட்டை செய்வதால் அது அழிந்துவிடுகிறது. அதற்கு மதிப்பளித்தால் அது ஒருவனை மெய்நூல்கள், குரு இவர்களின் உறுதுணையின்றிப் பரமாத்மாவை அடைவிக்கும் அளவுக்கு வலிமை பெறுகிறது. 958

நாம் பிறர் சொல்லை மதிக்கவில்லையெனில், பிறர் நம் சொல்லுக்கு மதிப்பளிக்காவிட்டால் சினம் கொள்ளக்கூடாது. 959

உள்ளே பேராசையில்லையெனில் தேவையான பொருட்கள் தாமே கிடைத்துவிடுகின்றன. ஏனெனில் பேராசையே பொருளைப் பெறுவதற்குத் தடையாகிறது. 960

யாரையும் அவமதிக்கக்கூடாது. அது நம்மையே அவமதித்துக் கொள்வதாகும். ஏனெனில் ஈசுவரன் எங்கும் நிறைந் துள்ளனர். 961

பாரத புண்ய பூமியில் பிறந்தும் மனிதன் பகவானிடம் ஈடுபட மறுப்பது வியப்பையும், துயரத்தையும் ஒருங்கே தருகிறது. முக்தியடைவதற்காகவே பாரத பூமியில் பிறவி கிடைக்கிறது. ஆகவே தேவர்களும் இங்கு பிறக்க விரும்புகின்றனர். 962

தர்மத்தின் வேர் - தன்னல மறுப்பும், பிறர்நலம் பேணலும். 963

நாமே அறவழியில் செல்வோம் - இதற்கு நிகரான தர்மப்ரசாரம் வேறொன்றுமில்லை. 964

“ஆசி கூறுங்கள்” - என்று ஸாதுக்களிடம் சொல்லிக் கொண்டிராமல் அவர்தம் ஆசீர்வாதத்துக்கான தகுதி பெறுவதற்குத் தயார் செய்து கொள்ள வேண்டும். 965

நிகழ் காலத்தைச் சீரமைத்துக் கொள்வதால் சென்றகாலமும், வருங்காலமும் சீர் பெறும். 966

துயரமடைந்தவனே பிறருக்கும் துயர் தருகிறான். பிறர் வசப்பட்டவனே பிறரை வசப்படுத்தும் எண்ணம் கொள்கிறான். 967

அஞ்ஞானி சென்றதைக் கனவாகக் கருதுகிறான். ஞானியோ (விவேகியோ) நிகழ்வதையும் கனவாகக் கருதுகிறான். 968

பொருளுக்கு எந்த ஒரு சிறப்பும் கிடையாது. அதன் சீரிய பயன்பாடே அதற்குரிய சிறப்பைத் தருகிறது. 969

பகவானின் அவசியத்தை உணர்வதே வழிபாடு. 970

அஸத் வஸ்துவில் பேராசை கொள்வது, அதைப் பெறுவதற்கே தடையாய் அமைகிறது. 'ஸத்'தில் பேராசையோ அதைப் பெறுவதில் துணை செய்கிறது. 971

உடலின் தேவை - செயல் இவற்றில் நேரமும், பொருளும் மிகக் குறைவாகவே செலவாகுமாறு கவனத்துடன் இருக்க வேண்டும். 972

'பரம்' - ப்ரக்ருதிக்கு அதீனமாவது பராதீனமாதல்; போகங்களுக்கு வசமாவதும் பராதீனமாதல்; 'ஸ்வம்' - ஸ்வரூபத்திற்கு அதீனமாவது ஸ்வாதீனமாதல் - உய்வு பெறுதல். 973

திரைப்படம் - தொலைக்காட்சி இவற்றால்

1. ஒழுக்கக் கேடு 2. கால விரயம்
3. பார்வைக் கோளாறு 4. பணச் செலவு

என்ற நான்கு தீமைகளும் விளைகின்றன. 974

ஏதேனுமொன்றைச் செய்வதால் ப்ரக்ருதியில் நிலைபெறுகிறோம்; யாதொன்றையும் செய்யாதிருப்பதால் பரமாத்மாவில் நிலை பெறுகிறோம். 975

நீர் சலனமின்றி இருப்பதால் மண் அடியில் தங்கி விடுகிறது. மனம், மொழி, அறிவு இவை சலனமின்றி இருந்தால் விகாரங்கள் அமைதியுற்று, 'நான்' என்பது கரைந்து விடுகிறது. உண்மையான தத்வத்தின் அனுபவமும் தோன்றுகிறது. 976

தீமைக்கு இடமளிப்பவரும், நன்மை செய்யும் இயல்பற்றவரும் ''இது நன்மைக்கான காலமன்று'' என்று கருதுகின்றனர். 977

ஒருவன் தன்னில் மற்றவரைக் காட்டிலும் தனிச்சிறப்பைக் கண்டால் அவன் ஸாதகன் ஆகலாம்; ஸித்தி பெற்றவன் ஆகமாட்டான். 978

பரமாத்மா கிடைத்துவிட்ட பொருள், உலகம் வெறும் தோற்றமே. கிடைத்தும் தென்படாத பொருளைக் கிடைத்த பொருள் என்கிறோம். தென்பட்டும் கிடைக்காத பொருளைத் தோற்றம் என்கிறோம். 979

## சரணாகதி*

ஸம்ஸாரத்தைச் சார்ந்து நின்றால் கீழ்ப்படியும் நிலை. பகவானைச் சார்ந்திருந்தால் சுதந்திரம். 980

பகவானிடம் ஆசிரயம் பெற்றாலன்றி அவரை அறிந்து கொள்ள இயலாது. 981

பகவான் ஒருவரைத் தவிர வேறெதையும் சாராதிருப்பது தான் 'அநந்ய பக்தி' 982

உலகைச் சார்ந்திருப்பதுதான் சரணாகதிக்குத் தடை 983

அச்சம் என்பது வேறொரு பொருளால்தான் ஏற்படுகிறது. தன்னிடமிருந்தன்று. பகவானோ நமதேயானவர். ஆகவே அவரைச் சரணடைவதால் மனிதன் எப்போதும் அச்சமின்றி இருக்கலாம். 984

★ சரணாகதி – புகலடைதல், தஞ்சமடைதல், அடைக்கலம் புகுதல்.

பகவானிடம் சரணாகதியைக் கடைப்பிடித்த பின்னர் பக்தனிடம் எவ்விதமான ஐயமும், சோதித்துப் பார்த்தலும், விபரீத மனப்பாங்கும், வீண் ஆராய்ச்சியும் இடம் பெறக் கூடாது. 985

பகவானுடனான தனது நித்ய ஸம்பந்தத்தைக் கண்டறிவதே அவரிடம் சரண்புகுவதாகும். சரணடைந்த பின்னர் பக்தன் கவலையற்று, அச்சமற்று, துயரொழிந்தவனாக, ஐயமகன்று திகழ்கிறான். 986

பகவானுக்காகத் தன் மனம் விரும்புவதைத் துறப்பதே சரணாகதியாகும். 987

சரணாகதி மனம், புத்தி இவற்றால் செய்யப்படுவதன்று; தன்னிலேயே (ஸ்வயம்) விளையும் ஒன்றாகும். 988

பரமனைச் சார்ந்திருப்பதைக் காட்டிலும், பிறிதொன்றும் சிறந்ததன்று. 989

வீண் கவலைகளை விட்டொழித்தலே சரணாகதி, ப்ராரப்த கர்மம் இரண்டினுடையவும் உட்கருத்தாகும். தன் முயற்சியைக் (அறநூல்கள் பகரும் கடமைகளை) கைவிடுவதன்று. 990

ஜீவன் என்பவன் பரமாத்மாவின் அம்சம். தனது மூலாதாரமான (அம்சியான) பரமாத்மாவைச் சரண்புகாதவரை அவன் ஏனையவற்றைச் சார்ந்தே இருப்பான்; துயரடைந்து கொண்டே இருப்பான். 991

மனிதன் பகவானைத் துணை கொள்ளாதவரையில் வேறு எந்தத் துணையும் நிலைக்காமல், துயரத்தில் ஆழ்ந்தவாறே இருப்பான். 992

தனது ஸாதனைகளில் செருக்கற்றவனும், தனது உய்வுக்கான வேறு ஒரு வழியும் புலப்படாதிருப்பவனுமே சரணாகதிக்கான தகுதி பெற்றவன். 993

எது ஒன்று நம்மைவிட்டு விலகாதோ, தனித்திராதோ, அகலாதோ, பராமுகமாகாதோ, எதிலிருந்து நாம் விலகமாட்டோமோ, அகலமாட்டோமோ, தனித்திரோமோ, அசட்டையாயிரோமோ அதையே அண்டியிருக்க வேண்டும். 994

தன்னில் ஏதேனும் தனித்தன்மையை ஒருவன் உணர்ந்தால் அது சரணாகதிக்குத் தடையாய் அமையும். 995

தனது வலிமையில் செருக்குள்ள வரையில் சரணாகதி முழுமை பெறாது. 996

சரணாகதி மிகவும் எளிது. ஆனால் செருக்கிருக்கும் மனிதனுக்குக் கடினமாகிறது. 'நான் சிறிதேனும் செய்ய வல்லவன்' இந்த அபிமானம் எதுவரை இருக்குமோ அதுவரை சரண் புகுவது கடினம்தான். 997

பகவானைச் சரண் புகுவதால் கிடைக்கும் தத்வம், தன் முயற்சியால் சிறிதும் கிடைக்காது. 998

எல்லா விதங்களிலும் பகவான் ஒருவரையே சரணடைவதைக் காட்டிலும் மேலான வேறொரு ஸாதனம் அறவே கிடையாது. 999

வேதங்களின் ஸாரம் உபநிஷத்துக்கள்; உபநிஷத்துக்களின் ஸாரம் **ஸ்ரீமத்பகவத்கீதை;** கீதையின் ஸாரம் பகவானிடம் செய்யும் சரணாகதியாகும். 1000



# Some of Our English Publications

1318 **Śrī Rāmacaritamānasa** (With Hindi Text, Transliteration & English Translation)

452, 453 **Śrīmad Vālmīki Rāmāyaṇa** (With Sanskrit Text and English Translation) Set of 2 volumes

564, 565 **Śrīmad Bhāgavata** (With Sanskrit Text and English Translation) Set

1080, 1081 **Śrīmad Bhagavadgītā Sādhaka-Sañjīvanī** (By Swami Ramsukhdas) (English Commentary) Set of 2 Volumes

457 **Śrīmad Bhagavadgītā Tattva-Vivecanī** (By Jayadayal Goyandka) Detailed Commentary

455 **Bhagavadgītā** (With Sanskrit Text and English Translation) Pocket size

534 ,, ,, (Bound)

1223 **Bhagavadgītā (Roman Gītā)** (With Sanskrit Text, Transliteration and English Translation)

456 **Śrī Rāmacaritamānasa** (With Hindi Text and English Translation)

1528 **Hanumāna Cālīsā** (Roman) (Pocket Size)

1491 **Mohana** ( Story with the Picture )

1492 **Rāma Lalā** ( ,, ,, ,, )

## By Jayadayal Goyandka

477 **Gems of Truth** [ Vol. I]

478 ,, [ Vol. II ]

480 **Instructive Eleven Stories**

1285 **Moral Stories**

1284 **Some Ideal Characters of Rāmāyaṇa**

1245 **Some Exemplary Characters of the Mahābhārata**

1125 **Five Divine Abodes**

520 **Secret of Jñānayoga**

521 ,, ,, **Premayoga**

522 ,, ,, **Karmayoga**

523 ,, ,, **Bhaktiyoga**

1501 **Real Love**

## By Hanuman Prasad Poddar

484 **Look Beyond the Veil**

622 **How to Attain Eternal Happiness ?**

485 **Path to Divinity**

620 **The Divine Name and Its Practice**

## By Swami Ramsukhdas

1470 **For Salvation of Mankind**

619 **Ease in God-Realization**

487 **Gītā Mādhurya**

472 **How to Lead A Household Life**

634 **God is Everything**

552 **Way to Attain the Supreme Bliss**

## SPECIAL EDITIONS

1391 **The Bhagavadgītā** ( Sanskrit Text and English Translation) Pocket Size

1411 **Gītā Roman** (Sanskrit text, Transliteration & English Translation) Book Size

1407 **The Drops of Nectar** (By Swami Ramsukhdas)

1406 **Gītā Mādhurya** (By Swami Ramsukhdas)

1438 **Discovery of Truth and Immortality** (By Swami Ramsukhdas)

1413 **All is God** (By Swami Ramsukhdas)

1414 **The Story of Mīrā Bāī** (Bankey Behari)

website:www.**gitapress**.org.

e-mail:**booksales@gitapress.org**

॥ ஸ்ரீஹரி: ॥

## கீதா பிரஸ்ஸின் பாராயண நூல்கள்

**Code No.**

1. 389 கீதா மாதுர்யம் (பகவத்கீதா – வினா-விடை)
2. 600 ஸ்ரீஹநுமாந் சாலீஸா – மூலம்
3. 743 ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் (சமஸ்கிருதம்–தமிழ்)
4. 793 ஸ்ரீமத் பகவத்கீதா – மூலம் & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் – மூலம்
5. 795 ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை
6. 800 ஸ்ரீமத் பகவத்கீதா–தத்வவிவேசனீ – [மூலம் – சமஸ்கிருதம்–தமிழ் – பதவுரை–பொழிப்புரை–விளக்கவுரை]
7. 823 ஸ்ரீமத் பகவத்கீதா – மூலம் (சமஸ்கிருதம்–தமிழ்) – பதவுரை–பொழிப்புரை
8. 1256 அத்யாத்ம ராமாயணம் – பொழிப்புரை
9. 1426 ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவநீ மூலம் (சமஸ்கிருதம்–தமிழ்) – பதவுரை–விளக்கவுரை 1 முதல் 9 அத்தியாயங்கள்
10. 1427 10 முதல் 18 அத்தியாயங்கள்
11. 1534 சுந்தரகாண்டம் (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்) – மூலம்–பொழிப்புரை
12. 1605 ஸ்ரீ உத்தவ கீதை (ஸ்ரீமத் பாகவத மகாபுராணம் – பதினோராவது ஸ்கந்தம்) – மூலம்–பொழிப்புரை
13. 1606 ஸ்ரீமந் நாராயணீயம் – மூலம்–பொழிப்புரை
14. 1618 சுந்தர காண்டம் (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்) – பொழிப்புரை
15. 1619 சுந்தர காண்டம் (ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்) – மூலம்

॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் அறிவுரை நல்கும் நூல்கள்

| | Code No. | |
|---|---|---|
| 1. | 127 | பயனுள்ள கதைகள் |
| 2. | 365 | பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் – கதைகள் |
| 3. | 423 | கர்ம ரஹஸ்யம் |
| 4. | 466 | ஸத்ஸங்கத்தின் ஸாரமான தத்வங்கள் |
| 5. | 499 | நாரத பக்தி ஸூத்ரம் |
| 6. | 536 | கீதை கற்பதன் பயன்கள் |
| 7. | 550 | திருநாமஜபத்தின் மஹிமை |
| 8. | 551 | தூய்மையான உணவுப் பழக்கம் |
| 9. | 553 | குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்? |
| 10. | 568 | சரணாகதி |
| 11. | 569 | உருவ வழிபாடு |
| 12. | 591 | மஹாபாவத்திலிருந்து உன்னைக் காத்துக் கொள் |
| 13. | 601 | பகவான் ஸ்ரீகிருஷ்ணன் |
| 14. | 606 | மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி |
| 15. | 607 | எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்? |
| 16. | 608 | பக்தராஜ ஹனுமான் |
| 17. | 642 | ஸ்ரீகிருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை |
| 18. | 643 | பகவான் உறையும் ஐந்து இடங்கள் |
| 19. | 646 | பல்சுவைக் கதைகள் |
| 20. | 655 | ஒன்றே செய்மின்! நன்றே செய்வீர்!! |
| 21. | 741 | மஹாத்மா விதுரர் |
| 22. | 792 | முக்கியமான எச்சரிக்கை |
| 23. | 805 | தாய்மையின் அவல நிலை |
| 24. | 850 | மஹான்களுடைய அமுத மொழிகள் |
| 25. | 952 | மஹான்களின் மணி மொழிகள் |
| 26. | 953 | மஹான்களின் சீரிய உபதேசம் |
| 27. | 1007 | கடையோனுக்கும் கடவுட்காட்சி |
| 28. | 1110 | ஆயிரம் அமுதத் துளிகள் |
| 29. | 1117 | நாட்டின் இன்றைய நிலையும், அதன் விளைவுகளும் |
| 30. | 1134 | கீதையின் பெருமையை விளக்கும் கதைகள் |
| 31. | 1243 | உண்மையான சுகம் |
| 32. | 1246 | பக்த சரித்திரம் |
| 33. | 1289 | சாதனை நெறி |
| 34. | 1480 | செயல்கள் அனைத்தும் பகவானுக்கே |
| 35. | 1481 | பகவானை நேரில் காண வழி |
| 36. | 1482 | பக்தி யோகம் |

படம் (ஹிந்தி) ஜய ஸ்ரீராம் (எழுத்தில் ராமாயணம்)